# தொல்காப்பியம்

## சொல்லதிகார விளக்கம்



சென்னை தமிழ் லெக்ஸிகன் ஆபீஸ் (1929-1936)

P. R. மீனாக்ஷிசுந்தர முதலியார் B.A., B.L.,

அவர்களால் இயற்றப்பெற்றது.

# ப் பி ய ம்

# விளக்கம்

சென்னை தமிழ்

லெக்ஸிகன் ஆபீஸ்

P. R.

மீனாக்ஷிசுந்தர

முதலியார் B.A., B.L.,

அவர்களால்

இயற்றப்பெற்றது.

1936

உரிமை
ஆக்கியோர்க்கே

# அடக்க

விஷயம்

முகவுரை
வாசகர்கள் கவனிக்க
தமிழ்ப்பாஷை

7
8

சொல்லதிகார விளக்கம்:
இலக்கணத்திற்
பிரயோகிக்கப்படும்
காரணக் குறிகள் 8


மூன்றாவது பாகுபாடு

நான்காவது பாகுபாடு

ஐந்தாவது பாகுபாடு
தொழின் முதனிலை
ஆகுபெயர்ச் சூத்திரம்
தொகை.....அசைநிலை
உரிச்சொல்
தமிழ் இலக்கண வரலாற்று
எச்சம்
வழுவமைதிகளின் வகை

... 26

சொல்லதிகார

# விளக்கம்

மு

க வு ரை

சொல்லதிகார

விளக்கம் எனப்

பெயரிடப்பட்ட இச் சிறு

நூலானது

தொல்காப்பியத்தின்
இரண்டாவது பாக மான
சொல்லதிகாரத்திலுள்ள
சில சூத்திரங்களின்
உண்மை யான கருத்து
எது என ஆராய்தலை
மேற்கொண்டது. சொல்
லதிகாரத்திற்கு உரை
வகுத்த பல
உரையாசிரியர்களும் பல

இடங்களில் தம்முள் மாறுபட்டுப் பொருள் கூறுவதால் சூத்திரங்களின் உட்கருத்து எதுவாயிருக்கலாம் என்று துணிய எனக்கு ஓர் அவா பயனே இந்நூல்.

சென்னை,
13—2—1936. } P.

## வாசகர்கள்
## கவனிக்கவேண்டிய குறிப்பு

அடியிற்கண்ட இலக்கணத்திற்குரிய காரண இடுகுறிப் பெயர்கள் (அவையவை பிரயோகிக்கப்பட்ட சந்தர்ப்பங் . களில் வேறு கருத்துக் குறியாத விஷயத்தில்) அவைகட்கு

நேராகக் காட்டியிருக்கும்
இங்கிலிஷ் இலக்கணக்
குறியீடு களுக்குச் சமமாக
இவ்வியாசத்தில்
பிரயோகிக்கப்பட்டிருக்
கின்றன. இவ்வாறு
பிரயோகிக்கப்பட்ட தன்
காரணம் இந்
நூலுட் காட்டப்படும்.

அசைநிலை

இடைச்சொல்

உரிச்சொல்

எச்சம்

ஒட்டு
ஒழிபு

செஞ்சொல்

பெயர்த்தொகை

பெயரெச்சம்
பெயரொட்டு

பொருள்

முதனிலை

வழிமருங்கு
வினைத்தொகை
வினை யெச்சம்
வினை யொட்டு
வேற்றுமை

Particle
Pronoun
noun (including Proper and Common)
Same as *acainilai*

Qualifying word

Word of complete form, as a noun or verb

adjective

Participial or relative adjective

Root-word

Part of speech; integral word in a sentence

Same as *olipu*

adverb

சமயம், சைவ
சமயம், வைஷ்ணவ
சமயம், ஆகிய ஐவகைச்
சமயங்களும்
தமிழ் மொழி
வழங்கும் நாட்டின்கண் பின்பற்றி
ஒழுகப்படு
வதற்கு முந்தியதும்,
தமிழ் நாட்டுச் சரித்திர
காலத்திற்கு
எட்டி அப்பாற்
கடந்ததுமான ஆதி

காலத்திலேயே, தமிழ்
நாட்டில்
"பதியெழுவறியாப்
பழங்குடிகளான"
தொன்மை
மக்களால் தமிழ்ப்
பாஷை செவ்விய நிலையை
அடையும்படி
யான தரத்தில்
பயிலப்பட்டு வந்தது
என்பதற்கு பண்டைய

தமிழ்நூல்களில் போதிய
ஆதாரங்கள் உள.
அவ்வாதிகாலத் திலேயே
தமிழ்ப் பாஷையானது
சொற்பன்மையும் சொல்
வளமும் இலக்கண
வரம்பும் பாடற்றொகுதியும்
பெற்
றிருந்தது.
அக்காலத்திலுள்ள

பாடல்களும் இலக்கணமும்

இறந்தொழிந்தபடியால்
நமக்கு அவை இப்போது
கிடைத்
தில. அந்நூல்கள்
சம்பந்தமாகத்தான் தமிழ்
நூல்கள்
கடல்கோட்பட்ட
வரலாறு ஆதியில்
புனையப்பட்டிருக்க
வேண்டும்.
பிற்காலத்திலுள்ள
ஆசிரியர்கள் இவ்வரலாற்றை

முதலிடை
யூழிகளுக்குரிய சங்க
நூல்களுக்கு ஏற்றிச்சொன்
னார்கள் எனத் தெரிகிறது.

தமிழ் மக்கள்

மேற்சொன்ன

ஐவகைச் சமயங்கள்

பின்பற்றப்பட்டு

வந்த பிற்காலத்தில், தமிழ் நாட்டிலுள்ள "பதினெழுவறியாப் பழங்குடிகளிற்" சில கூட்டத்தார்களும் வடநாட்டிலிருந்து

குடியேறித் தமிழ் நாட்டில்

தங்கிய வடநாட்டார்களிற்

சில ரும்

வடநாட்டிற்குரிய பாஷைகளைப் பயின்றும் சமயங்களில்

ஒழுகியும் கலந்து

வாழ்ந்தும்

வந்தபடியால் இப்போது

தமிழ்

நாட்டிடை வதியும் மக்களில் தமிழ்ப் பேசுவோரில் யார் வட

தொல்காப்பியம்

நாட்டார் யார்

உண்ணூட்டார் என

அறிவது முடியாத காரியம்.

தமிழ்ப்பாஷை

பேசப்பயின்றோர் யாவரும்

தமிழ்மக்க

ளாக ஆய்விட்டார்கள் என

யிருக்கிறது.

தமிழ்

இப்பொழுது நாம்

நாம் கருத வேண்டியது நியாயமா

இலக்கியம்

கையாளும் தமிழிலக்கியங்களில்

சரித்திர காலத்துக்கு முந்திய பண்டைத் தமிழரின் புலமைப் பகுதி ஊடு கலந்து காணப்பட்ட போதிலும், இவ்விலக்கி

யங்கள் யாவும்

சரித்திரகாலமான

பிற்காலத்திற் றோன்றி

யவைகளே.

இவ்விலக்கிய

நூல்களிற் சிறப்புற்றன இரண்டே: அவை

திருவள்ளுருடைய திருக்குறளும் இளங்கோவடிகளுடைய சிலப்பதிகாரமும். திருக்குறள் பௌத்த காலத்திற் றோன்

றியதாகத் தெரிகிறது.

சிலப்பதிகாரம்

திருக்குறட்குப் பிந் திய

காலத்தில் தோன்றியதாகத் தெரிகிறது.

மெய்ப்பொருள்

கூறும் சமய நூல்களிற்

சிறப்புற்றன திருமூலருடைய

திருமந்திரமும்
நம்மாழ்வாருடைய திரு
வாய் மொழியும்
மாணிக்கவாசகருடைய
திருவாசகமும்
ஆகிய மூன்று நூல்களே
என்று நாம் கூறலாம்.

திருமந்திரத்தில்
நித்ய தத்துவ
உண்மைகளும் விஞ்

ஞான சாஸ்திரத்திற்குரிய
அநுமான உண்மைகளும்
அடங்
கியுள்ளன. அவற்றில்
தத்துவ உண்மைகளைக்
கூறும்பாகமே
நமக்கு நன்மை பயப்பது.

செவிக்கினிமை
பயப்பத் தமிழ்ப்பாஷையின்
மரபை

(idiom) ஒட்டித் தமிழ்ப் பாடல்களை அமைத்த நூல்களில் பெரியாழ்வார், காரைக்காலம்மையார், திருநாவுக்காசர்

ஆகிய பக்தர்களின்

பிரபந்தங்கள்

போற்றத் தகுந்தவை.

சொல்லதிகார விளக்கம்

5 தமிழைக்

கம்பீர நடையில்

எழுதுவதில் கம்பராமாய

ணமும், அரசர் புலவர்

குடிகள் ஆகிய
எல்லாருடைய
க்ஷேமத்திலும்
ஈடுபடும்படி செவ்வனே பாடியிருப்பதில் பரஞ்
சோதி முனிவருடைய
திருவிளையாடற் புராணமும்,
எவ்விஷயத்தையும்
கனிவுடனும்
உருக்கத்துடனும்
கூறுவதில் சேக்கிழாருடைய
திருத்தொண்டர்

புராணமும் மதிக்கத்
தகுந்தவை.
தத்துவ சாஸ்திரம்
சமயம் இவற்றிலுள்ள
உண்மைகளைத் தமிழ்
மக்களின் நன்மையின்
பொருட்டுத் தெளிவான
தமிழ்ப் பாடலில் எடுத்து
உணர்த்துவதால்
கந்தபுராணம் சிறந்த
நூலாகக்

கருதப்படுபவைகளில்
ஒன்றாகும். சிற்றின்
பத்தைபற்றிச்
செவ்வையாய்க் கூறுவதில்
சீவக சிந்தாமணி யும்,
அகப்பொருளாகிய
இன்பச்சுவையைப்பற்றிப்
பாடி யிருப்பதில்
முத்தொள்ளாயிரமும்
கலிங்கத்துப் பாணியும் நீதி
நூல்களில்

நான்மணிக்கடிகை,
பழமொழி, நாலடியார்
ஆகிய மூன்றும் சங்க
நூல்கள்
எனப்படுவனவற்றில் பத்துப்
பாட்டும் புறநானூறும்
கலித்தொகையும், ஆகிய
இந்நூல்
கள் தேர்ந்தெடுத்துப் பாராட்டற்
குரியவையா யிருக்கின்றன.

தனிப் பாடல்களில்

ஔவை போராலும் கம்பர்

போரா லும்

வழங்கப்படுபவை சிறந்தன.

பிற்கால ஆசிரியர்களிற்

சிறந்தோரில் பிள்ளைப்

பெருமாளையங்கார்

குமரகுருபர சுவாமிகள்

சிவப்பிரகாச சுவாமிகள்

சிவஞான சுவாமிகள்

தாயுமான சுவாமிகள்

படிக்காசுப்புலவர்

இராமலிங்க சுவாமி கள்

என்பவர்களைக் கூறலாம்.

வெண்பாவில்

பெருந்தேவனார்

பாரதவெண்பா சிறந்த

தென

நுண் ணுணர்வுடையோரால்

கருதப்படுகிறது. பதி

ஞெராந்

திருமுறையில் சேரமான்
பெருமாணுயனுர், நக்கீர

6

தொல்காப்பியம்

தேவநாயனுர்,
பட்டணத்துப் பிள்ளையார்
ஆகிய பக்தர்க
ளாற் பாடப்பட்டுத்
தொகுக்கப்பட்ட

பாடல்கள் உறுதி
பயக்கும் உண்மையைத்
தமிழ் மக்கட்கு எடுத்துக்
கூறும்
நோக்கமுடையவாகக்
காணப்படுகின்றன.

## தமிழ் இலக்கணம்

இலக்கண நூலிற்
சிறப்புற்றது
தொல்காப்பியம் என்னும்

பெயருடைய நூலே. இந்நூலானது மூன்று பாகம் அடங்கியது. ஒவ்வொரு பாகமும் அதிகாரம் எனப் பேர் பெறும். அம்மூன்று பாகங்களும் முறையே எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என வழங்கப்ப்டு.

கின்றன.

# எழுத்ததிகாரம்

எழுத்ததிகாரத்தில் தமிழ்பாஷைக்குரிய எழுத்துக் களின் பெயரும், ஓதப்படும் முறையும், என்றும் வகை யும் பிறப்பும், ஒலியின் அளவு வரையும் உணர்த்தப்படு கின்றதோடு, செய்யுள்

நோக்கித்
தனிமொழியானது ஒரு
மொழி, தொடர்மொழி
என இருவகையாகப்
பிரிக்கப்படும்
இயல்பும்,
சந்தியிலக்கணம் நோக்கி
அத் தனிமொழியானது
பெயர், வினை, உருபு,
சாரியை, என
நால்வகையாகப் பிரிக்
கப்படும் இயல்பும்,

தனிமொழிக் குரிய
சந்தியிலக்கணமும்
வேற்றுமைத் தொகுதி,
அல்வழித்தொகுதி என
இருவகை
யாகப் பிரிக்கபபட்ட
புணர்மொழிகளுக்குரிய சந்தியிலக்கண
மும்
உணர்த்தப்படுகின்றன.

## சொல்லதிகாரம்

சொல்லதிகாரத்தில்
பெயர்ப்பொருளிலை

றுமையுருபு, காலவுருபு,
திணைபாலிடப் பொருள்
களுக்குரிய சிறப்புருபு,
அவற்றிற்குரிய பொதுமை
யுருபு
அல்லது குறிப்புருபு
முதலிய பல்வகை
யுருபுகள்,
அக்காரணச்
சொற்களோடு இயைவதாற்
பிறக்கும் கிளவி

களின் இலக்கணத்தை
யுணர்த்தும்
கிளவியாக்கமும்,
ஆகுபெயரின் இயல்பும்
வகையும், சொற்றொடரில்
உறுப்
பாய் அமைவனவும்,
செஞ்சொல்,
வழிமருங்குச்சொல்,
வேற்றுமைச்சொல், அசைநிலை எனத் திணைபாற்பொருணிச்
சயம் நோக்கி நால்வகையாய்ப் பிரிக்கப்படுபவுமான முத
னிலைக் கிளவிகளின்

(Parts of speech or elements of a sentence)

இலக்கணமும் அந்நால்வகை முதனிலைக் கிளவிகள் தனித்தனியே பிரிக்கப்படும் நிமித்தங்களும், புலவர் வழக்காகிய செய்யுளிடம் உலக வழக்காகிய உரை

யிடம் ஆகிய இருவகை
யிடங்களுக்குரிய
சொற்றொடர்க்
கிளவியானது, செப்பு,
வினா என இரு வகைகளில்,
வழூஉ
வின்றி அமைக்கப்படும்
முறையும், மரபுச்சொல்,
வழூஉ
வமைதி ஆகிய இவற்றின்
இலக்கணமும்

உணர்த்தப்படு
கின்றன.

## பொருளதிகாரம்

பொருளதிகாரத்தில்
புலவர் வழக்காகிய
செய்யுளின்
இயல்பும், வகையும்,
பெயரும், என்றும்,
உவகை பெரு
மிதம் முதலிய
நவரசங்கள் எனப்படும்

மெய்ப்பாட்டின்
இலக்கணமும், உவமை
யணியின் தன்மையும்
வகையும்
அகப்பொருள் எனப்படும்
உவகைக்குரிய களவியல்
கற்பியல்
களின் இயல்பும்,
புறப்பொருள் எனப்படும்
பெருமிதம்,
கல்வி, கொடை, நடுவுநிலை

எனப்

பல்பொருள்களுக்குரிய

8

தொல்காப்பியம்

வேந்தர் முனிவர்

முதலியோர்களின்

இயல்புகளும், உலக மரபும்

(Law and

Convention)

உணர்த்தப்படுகின்றன.

## தொல்காப்பியத்தின் உரையாசிரியர்கள்

தொல்காப்பியத்தின் இம்மூன்று பாகங்களுக்கும் தனித்தனியே பற்பல உரையாசிரியர்கள் உரை வகுத்திருக்கின்றனர். அவரிற்

காலத்தால் முந்தியவர்
இளம் பூரணர்
எனக் கருதப்படுகிறது;
இவருடைய உரை மூன்று
பாகங்
களுக்கும் உண்டு.
நச்சினார்க்கினியர்
என்பார் எழுத்ததிகாரம்
சொல்லதி
காரம் ஆகிய இரண்டு
பாகங்களுக்கும்

பொருளதிகாரத்தி
லுள்ள முதலைந்து
இயல்களுக்கும் உரை
வகுத்தவர். பொரு
ளதிகாரத்தின் பிந்திய
நாலியல்களுக்கு உரை
வகுத்தவர்
பேராசிரியர் எனக்
கருதப்படுகிறது.

சேனவரையர்.

தெய்வச்சிலையார் எனும்

இருவரும்
சொல்லதிகாரத்திற்குத்
தனித்தனியே உரை
வகுத்திருக்கின்
றார்கள். தெய்வச்சிலையார்
உரை என அச்சிட்ட நூல்
பேராசி
ரியரின் உரை தானோ என
ஐயுறுவாரும் உண்டு.

## சொல்திகார விளக்கம்

இலக்கணத்திற்

பிரயோகிக்கப்படுங்
காரணக்குறிகள்:—

கண்ணிறகுப் புலப்படும் எந்தப் பொருளுக்காவது
உள்ளத்
திங்கட் டோன்றும்
எந்தக் கருத்துக்காவது
மக்களின்
பாஷையில் இட்டு
வழங்கும் பெயரானது
வடமொழி
முறைப்படி யோக நாமம்
ரூடி நாமம் என இருவகைப் படும்.

யோகநாமம் என்பது காரணங் குறித்து இடப்பட்ட பெயர்; ரூடிநாமம் என்பது ஒருகாரணமு மின்றிப் பொருள்களுக்கு இட்டு வழங்கும் மரபுப் பெயர். தமிழில் முன்னது காரணப்

பெயர் எனவும் பின்னது
இடுகுறி அல்லது
மரபுப்பெயர் எனவும்
கூறப்படும்.

வெவ்வேறு
காரணங்களை
நிமித்தம் பல
வஸ்துக்களுக் குத்
தனித்தனியே பொருந்தக்
கூடிய ஒருகாரணப்
பெயரை அவ்வஸ்துக்களில்

யாதாம் ஒன்றிற்கு
அதனிடை அமைந்த
சிறப்புக்
காரணத்தால் இட்டு
வழங்குவோமாயின்
அப்பெயர் யோகரூடி
அல்லது 'காரணவிடுகுறி
எனப்படும்'. பாஷையின்
தெளிவும் செம்மையும்
கருதுபவர்கள் காரண
விடுகுறிப் பெயர்களை

அவ்வவற்றிற்குரிய
கருத்துக்களைக் குறிக்கவே
வழங்குவார்கள். இவ்வாறு
வழங்குவதே தர்க்க
முறைமைக் குப்
பொருந்துவது.
அவ்வாறின்றி ஒரு
காரணம் நோக்கி
ஒரு கருத்தைக் குறிக்க இடப்பட்ட காரணவிடுகுறிப்
பெயரை வேறொரு
காரணம்பற்றி வேறொரு

கருத்தைக் குறிக்க ஆசிரியர்கள் வழங்குவராயின், அவ்வாறு வழங்குவது நியதியில்லாத முறையாகக் கருதப்படும்.

அம்முறையானது, ஆசிரியன் நினைத்த பொருளை நாம் எளிதில் உணர்ந்து கொள்வதற்குத் தடையாயிருக்கிறது.

தொல்
காப்பியத்தில்
சொல்லிலக்கணம்
உணர்த்த முயலும்
இரண்டாவது பாகமான
சொல் லதிகாரத்தின் மூலச்
சூத்திரங்களிலும்
அவைகளுக்குச்
சேனாவரையர் முதலியோர்
இயற்றிய உரைகளிலும்
பல இலக்கணக் கருத்

துக்களைக் குறிக்க
யோகரூடி எனப்படும்
காரணவிடுகுறிப் பெயர்கள்
பல வழங்கப்படுகின்றன.
அப்பெயர்கள் பிரயோ
கிக்கப்பட்ட
இடங்களிலெல்லாம் அவை
ஒரே நிர்ணயிக்கப் பட்ட
அர்த்தம்
கொடுக்கும்படியாக
வழங்கப்படவில்லை.

இது சொல்லதிகாரத்தையும் அதன் உரைகளையும் பயின்றார் யாவரும் அநுபவித்தறிந்த விஷயம். இப்பொருந்தாமுறை தொல்காப்பியத்தினால் தமிழிலக்கணம் கற்பார் அதன் உண்மையான இயல்பைத் தெரிந்துகொள்ள

முடியாமல் பெரிதும் இடர்ப்படு கின்றனர்.

பொருள்,

கிளவி, திணை, பால், இடம், காலம், வேற் றுமை, உருபு, முற்று, எச்சம், குறிப்பு, மெய், வழக்கு, செய் யுள், பெயர், வினை, இடை, உரி, தொகை, ஒட்டு, மருங்கு, வழி, முதனிலை, இசை, இயற்சொல், திரி சொல்,

ஒழிபு முதலிய காரண விடுகுறிகள் சகலமும் சொல்லதிகாரம் மூலத்திலும் அதன் உரைகளிலும் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு கருத்துடன் பிரயோகிக்கப்பட்டிருக்கின்றன.

ஆசிரியர்களின் முறையில்லாத இந்த வழக்கத்தால் பண்டைக்காலத்தில்

# துணியப்பட்ட தமிழிலக்கண

# முடிபுகள்

இவையெனத் தெளிவாய்ப் புலப்பட மார்க்கமில்லாமலிருக்கிறது.

சொல்லதிகாரத்தின் உரைகளிற் பற்பல இடங்களிற் சிதறிக்கிடக்கும் பொன்போன்ற சில சொற்றொடர்களின் உதவியைக்கொண்டும் பழைமையான உண்மைக் கருத்தைத் தெரிவிக்கும் சில சூத்திரங்களின் உதவியைக் கொண்டும் உண்மையான தமிழிலக்கணம் இன்னது எனத் துணிவிற்கு வரும்பொருட்டு இவ்வியாசத்தை எழுதும் முயற்சியில் நான் கருத்தைச் செலுத்தினேன்.

# சொற்

# பாகுபாடு

தமிழ்ச் சொற் பாகுபாட்டு வகைகளிற் சில ஆதியில் தோன்றியவை; வேறு சில பிற்காலத்தில் உண்டானவை. சில பாகுபாட்டு வகைகள் தமிழ்ப்பாஷைக்குச் சிறப்பாய் உரியன வாகக் காணப்படுகின்றன. வேறு சில வடமொழி இலக்கண வழக்குகளைப் பின்பற்றித் தமிழில் அமைக்கப்பட்டன. இப்



பாகுபாட்டு வகைகளின் நிமித்தங்களை நாம் இனிதுணர்ந்தாலன்றித் தொல்காப்பியத்தின் இரண்டாவது

பாகமானசொல்

லதிகாரத்தில்

உணர்த்தப்பட்ட

சொல்லிலக்கணம் நமக்கு

எளிதிற் புலப்படாது.

முதலாவது

பாகுபாடு. (திணை பால்).

சொல்லதிகாரத்தில்

உணர்த்தப்படுஞ் சொற்கள்

நால்

வகையாகக்
காணப்படுகின்றன. அவை
செஞ்சொல், வேற்று
மைச்சொல்,
ஒழிபுச்சொல்.
எஞ்சுபொருட்
கிளவி எனப் படும்
எச்சம் என்பன. அவற்றில்
கிளவியாக்கவியலின் முதற்

சூத்திரத்தில் உணர்த்தப்படுவது செஞ்சொல்; திணைபாற் பொருள்களுக்குரிய ஈறு பெற்றுவது பெறுமலாவது அப் பொருள்களை உணர்த்தும் எச்சொல்லும் செஞ்சொல்லே.

சூத்திரத்தில்

> "சொல்லெனப் படுப பெயரே வினையென்
> றாயிரண்டென்ப வறிஞ்சினோரே"

என்று கூறுவதில்
செஞ்சொல்லின் வகை
சுட்டப்படுகிறது.

திணை, பால் உணர்த்தும்
பெயரும், திணை, பால்
உணர்த்தும்

வினையும் ஆகச்
செஞ்சொல்
இருவகைப்படும் என இச்

சூத்

திரம் கூறுகிறது. நிலம், நீர், புனல், தீ, அனல், வளி, காற்று,

ஆகாயம், வானம், மரம், உண், செம்மல் முதலிய சொற்கள் ஈறுபெறாமல் வழக்கின்கண் திணை,பால் உணர்த்துஞ் செஞ்சொற்கள். நிலத்தன், வானவன், உண்டான் முதலிய சொற்கள் ஈறுபெற்றுத் திணை, பால் உணர்த்துஞ் செஞ்சொற்கள்.

## பெயரியல்

இரண்டாவது சூத்திரத்தில்,

"பொருண்மை
தெரிதலும் சொன்மை
தெரிதலும்
சொல்லின் ஆகும்

என்மனார் புலவர்"

என்று கூறுவதில் பொருண்மைநிலை தெரிதல் என்பதாற் சுட்டப்பட்ட சொல்வகை இச் செஞ்சொல்லே.

## 12

தொல்காப்பியம்

வழிமருங்குச் சொல்.

இனிச் செஞ்சொல் ஒழிந்த ஏனை மூன்று வகையும்

வழிமருங்குச் சொல் அல்லது பகுதிக் கிளவி எனப்படும்.

கிளவியாக்கவியலிலுள்ள 17-வது சூத்திரத்தில்

"தகுதியும் வழக்குந் தழீஇயின வொழுகும் பகுதிக் கிளவி வரைநிலையிலவே" *

என்பதில் சுட்டப்பட்ட

பகுதிக்கிளவி வேற்றுமைச் சொல், ஒழிபுச்சொல், எச்சம் எனப்பட்ட இம்மூன்று வகையையும் குறித்ததே. சேனாவரையர் 'பகுதிக் கிளவி'' என்பதற்குப் பக்கச்சொல் எனக்

கூறுவது கவனிக்கத்

தக்கது. பகுதிக்கிளவி
என்பது பக்கச் சொல்

எனத்
தோன்று தொட்டு
உணரப்பட்டு வந்ததால்
அவர் இவ்வாறு
கூறுகிறார். பக்கச்சொல்
என்பது பெயரியலிற்
கூறப்பட்ட
வழிமருங்குச்
சொல்லே. பெயரியல்

5-வது சூத்திரத்தில்

"இடைச்சொற்கிளவியும்

உரிச்சொற்கிளவியும்

அவற்றுவழி

மருங்கிற்றோன்று

மென்ப" எனக் கூறுவதில்

'வழிமருங்கு'

எனக் குறிப்பிடுவது இப்

பகுதிக்கிளவிதான்.

மேற்சொன்ன

கிளவியாக்கவியல் 17-வது
சூத்திரத்திற்
காணப்பட்ட "தகுதி"
என்பது தக்கோராய
புலவரின் செய்
யுள் வழக்கைச்
சுட்டியது.
கிளவியாக்கவியலில் பகுதிக்
கிள
வியைப்பற்றிக் கூறிய
சூத்திரத்திற்கடுத்த 18-வது

சூத்திரத்

தில் "செய்யுளாறு"

எனப்பட்டது இத்

'தகுதி'. என்னும்

---

* இச்சூத்திரத்திற்குச்

சேனவரையரும் தெய்வச்

சிலையாரும்

வெவ்வேறு விதமாக

உரை கூறுவதிலிருந்து,

இச்சூத்திரத்தின்

உண்மையான கருத்து

அக்காலத்திலேயே மறைந்து விட்டதெ

னத் தெரிகிறது. பொரு. உவமவியல். 19ம் சூத். "பெருமையுஞ்"

என்பதன் உரையில் (பேரா.) செவ்வி து, வழிமருங்கு என்ற உட்

பிரிவுகளைக் கவனிக்க.

வழிமருங்குச் சொல்.

இனிச்
செஞ்சொல் ஒழிந்த
ஏனை மூன்று வகையும்
வழிமருங்குச் சொல்
அல்லது பகுதிக் கிளவி
எனப்படும்.

கிளவியாக்கவியலி லுள்ள
17-வது சூத்திரத்தில்
“தகுதியும் வழக்குந்
தழீஇயின வொழுகும்

பகுதிக் கிளவி
வரைநிலையிலவே” *
என்பதில்
சுட்டப்பட்ட
பகுதிக்கிளவி
வேற்றுமைச்

சொல், ஒழிபுச்சொல், எச்சம் எனப்பட்ட இம்மூன்று வகையையும் குறித்ததே. சேனாவரையர் 'பகுதிக் கிளவி'' என்பதற்குப் பக்கச்சொல் எனக் கூறுவது கவனிக்கத்

தந்தது. பகுதிக்கிளவி என்பது பக்கச் சொல் எனத்
தொன்று தொட்டு உணரப்பட்டு வந்ததால் அவர் இவ்வாறு
கூறுகிறார். பக்கச்சொல் என்பது பெயரியலிற் கூறப்பட்ட
வழிமருங்குச் சொல்லே. பெயரியல்

5-வது சூத்திரத்தில்

"இடைச்சொற்கிளவியும் உரிச்சொற்கிளவியும் அவற்றுவழி மருங்கிற்றோன்று மென்ப" எனக் கூறுவதில் 'வழிமருங்கு' எனக் குறிப்பிடுவது இப் பகுதிக்கிளவிதான்.

மேற்சொன்ன

கிளவியாக்கவியல் 17-வது சூத்திரத்திற் காணப்பட்ட "தகுதி" என்பது தக்கோராய புலவரின் செய் யுள் வழக்கைச் சுட்டியது. கிளவியாக்கவியலில் பகுதிக் கிள வியைப்பற்றிக் கூறிய சூத்திரத்திற்கடுத்த 18-வது

சூத்திரத்

தில் "செய்யுளாறு"

எனப்பட்டது இத்

'தகுதி'. என்னும்

---

*

இச்சூத்திரத்திற்குச்

சேனாவரையரும் தெய்வச்

சிலையாரும்

வெவ்வேறு விதமாக

உரை கூறுவதிலிருந்து,

இச்சூத்திரத்தின்

உண்மையான கருத்து அக்காலத்திலேயே மறைந்து விட்டதெ

னத் தெரிகிறது. பொரு. உவமவியல். 19ம் சூத். "பெருமையுஞ்"

என்பதன் உரையில் (பேரா.) செவ்விது, வழிமருங்கு என்ற உட்பிரிவுகளைக் கவனிக்க.

## 2.

ஒழிபுச்சொல்:—இவ்வகையானது, பெயரொழிபு, வினையொழிபு என இருவகைப்படும். சொல்லதிகாரம் எச்சவியலிலுள்ள "பிரிநிலை வினையே", என்ற சூத்திரத்திற் குரிய சேனாவரையர்

நச்சினார்க்கினியர்
உரைகளின் பிரகாரம்
இவ்விருவகை யொழிபுகள்
ஆதியில்
அங்கீகரிக்கப்பட்டிருந்
தன என்று தெரிகிறது.
மேற்படி உரைகளில்
சேனவரை
யரால் ஒருசார்
பெயர்
எனக்குறிப்பிடப்படுவது

பெய.

ரொழிபே.

பெயரிலக்கணங்கூறும்

இயல்களில் ஒன்றுன

வேற்றுமையியலினுள்ள

‘பெயரினுகிய

தொகையுமாருளவே’

என்ற சூத்திரத்தில்

சுட்டப்பட்ட

பெயர்த்தொகையும்

(adjective),

வினைத்தொகையும்

(adverb) பெயரொழிபு

என்பதன்பாற்படும்.

மேற்படி உரையில்

சேனவரையரால்

ஒருசார்வினை

எனக்குறிப்பிடப்படுவது

நச்சினார்க்கினியரால்

கூறப்படும்

வினையொழிபே.

பெயரெச்சம் எனப்படும்

பெய ரொட்டும்
வினையெச்சம் எனப்படும்
வினையொட்டும் வினை
யொழிபுகள்;
இவற்றிற்குரிய இலக்கணம்
வினையியலிற் கூறப்
படுகிறது.

ஆகவே பெயர்த்தொகை (adj.) வினைத்தொகை (adverb), பெயரொட்டு, (relative or adjectival participle) வினையொட்டு (adverbial participle) ஆகியனவும்

ஒழிபுச் சொல் என்ற வகையிற் சேர்ந்தவை.

3. எச்சம்:— சொற்றொடரில் வரும் பொருட்கிளவிகளில் (parts of speech) சிறப்புடைய பெயர்வினைச் செஞ்சொற்கள், வினைமுதலொழிந்த எழுவகை வேற்றுமைச் சொற்கள், நால்வகை யொழிபுச் சொற்கள் ஆகிய மூவகை வாய்பாட்டுக் கூறுகள் தவிர எஞ்சிய பொருட்கிளவிகள் எச்சம் (particle) என்னும் குறிக்குரித்தாக ஆதியிற்கருதப்பட்டன



இவ்வெஞ்சிய பொருட்கிளவிகள் வினா, எதிர்மறை, தேற்றம், பிரிநிலை, ஒழியிசை, உம் என்பதாற் சுட்டப்பட்ட எண், கழிவு, சிறப்பு, வினைமாற்று முதலிய பொருள்களுக்குரியவும், பொரும்பாலும் இடையியலிற் கிளந்தோதப்பட்டனவையு

மாகிய ஏ, ஓ, மன், கொன், கொல், ஆங்க, தில், ஆக, ஆகல் முதலிய

அசை நிலைக் கூறுகளே.

இவ்வசைநிலைகளுக்கே

யுரிய எச்சம் என்னும்

குறியானது பிற்காலத்தில்

ஏற்பட்ட

'பிறநிலை வினையே''

என்னும் சூத்திரத்தின்

மூலம் ஒழிபுச்

சொல்லின் வகையாகிய வினையெச்சம் பெயரெச்சம்

ஆகிய இரண்டையுங்

கூடச் சுட்டும் பொருட்டு
ஆளப்பட்டது:
இப்போது இடையியலில்
காணப்படும்
எச்சத்திற்குரிய" சூத்
திரங்கள் யாவும்
ஆதிகாலத்தில் எச்சவியலில்
உணர்த்தப்பட்
டிருக்க வேண்டும்.

இலக்கணக் குறிகள்
ஒன்றுக்கொன்று

மாற்றியாளப்பட்ட
பிற்காலத்தில், 'எச்சவியல்'
என்னும்
தலைப்புப் பெயருக்கு
'கிளவியாக்க வியல் முதல்
உரியியல்
வரையுள்ள இயல்களிற்
கூறப்படாமல் எஞ்சிய
விஷயங்க ளைக் கூறும்
இயல்' எனப் புதிதாகக்

கருத்துக் கொடுக்கப்
பட்டது.

இரண்டாவது: செஞ்சோற்
பாகுபாடு:—வாக்கிய உறுப்
பாகிய
முதனிலையின் ஒரு
கூற்றாகிய
செஞ்சொல்லானது
பெயர்ச் சொல்,

வினைச்சொல் என

இருவகையாகக் காணப்

படுகிறது. அவற்றில் பெயரானது ஆதியில் உரிச்சொல் (noun proper) இடைச் சொல் (Pronoun) என இரு

வகையாகப் பிரிக்கப்பட்டது.

அவ்வுரிச் சொல்லும் சொல்லதிகாரம் உரியியல் இரண்டாவது சூத்திரத்தில் கூறியிருக்கிறபடி வெளிப்படுசொல் (Concrete noun) வெளிப்படா உரிச்சொல் (Abstract-

16

தொல்காப்பியம்

noun) என இருவகையாகப் பிரிக்கப்பட்டது.

ஆகவே செஞ்
சொல் எனப்பட்ட
வகையில் பண்டைய
ஆசிரியர்களால்
வெளிப்படுசொல், வெளிப்படா
உரிச்சொல், இடைச்சொல்,
வினைச்சொல் என
நாற்கூறு காணப்பட்டது.

அவற்றில் '
வெளிப்படுசொல்'

என்பது சிறப்பாகப்
, பெயர்ச்சொல்
எனப்பட்டது.
வெளிப்படா உரிச்சொல்லா
கிய பண்புச்
சொல்லுக்கும் தொழிற்
பெயர்க்கும் (verbal
noun) ‘ உரி ’ என்னுங்
குறி சிறப்பாகக் கொடுக்கப்பட்டது.
ஆகவே தொல்லாசிரியர்கள்
செஞ்சொல்லின்

நாற்கூறுகளைக்
கூறுங்கால் பெயர், வினை, இடை, உரி என்ற சிறப்புக் குறி
களால் அவற்றைக் குறித்தனர். ஆகவே செஞ்சொல்லில்
மூன்றுவகை பெயராகவும் ஒருவகை வினையாகவும் காணப்
பட்டது.

# பெயர்ச் செஞ்சொல்.

பெயர்ச் செஞ்சொல்
என்ற வகையில்
இடைச்சொல் தவிர
மற்றைய வகை பொதுவாக
உரிச்சொல் எனப்பட்டு

அவ்வுரிச் சொல்லானது திணைப்பொருட்சொல், தொழிற் பெயர்ச்சொல், பண்புச்சொல் என மூவகையாகப் பகுக்கப் பட்டிருந்தது. இடைச்சொல்லிற்கும் இம்மூவகை உரிச்

சொல்லிற்கும் உள்ள தன்மை வேறுபாடு பண்டைய ஆசிரியர்களால் அங்கீகரிக்கப்பட்டிருந்தது என்பதற்குப் போதுமான ஆதாரம் சொல்லதிகாரத்திலும் அதன் உரைகளிலும் கிடைக்கிறது.

# சொல்லதிகாரம்

# கிளவியாக்கவியலில்

"பொருளொடு புணராச் சுட்டுப் பெயராயினும்
பொருள் வேறுபடாது ஒன்றாகும்மே"

# சொல்லதிகார விளக்கம்

# 17

என்ற சூத்திரம் 37-வது ஆகக் காணப்படுகிறது. இச்சூத்திரத்திற்குச் சேனாவரையர் எழுதிய உரையில் பொன்போற் போற்றப்படும் சொற்றொடர் ஒன்றுகாணப்படுகிறது. அஃது வருமாறு:—"சாதியும் பண்பும் தொழிலும் முதலாயின பற்றி ஒரு பொருளை (Substantive idea அல்லது பெயர்) வரைந்துணர்த்தாது எல்லாப் பொருள் மேலுஞ் சேறலிற் பொருளொடு புணராச் சுட்டுப் பெயர் என்றார்" என்பது. . இங்கே சாதி என்பது கிளவியாக்கவியல் முதற் சூத்திரத்திற் குறிக்கப்பட்ட கிளைவகை (Concrete noun); தொழில் என்பது தொழிற் பெயர் (Verbal noun); பண்பு என்பது பண்புப் பெயர் (Abstract noun); பண்புந் தொழிலும் என்ற அடுக்கால் குறிக்கப்பட்ட இருவகைப்பெயரும், கிளவி

யாக்கவியல் 56-வது சூத்திரத்தில் சொல்லப்பட்ட "முன்னத் திணுணருங்கிளவி" என்றவகையின் பாற்படும். முன்னத்தின் கிளவி என்பதில் முன்னம் என்றால் கருத்து (Abstract-ness of idea as distinguished from concrete thing.)

எல்லா

இடைச்சொற்கும்
பொதுவான இலக்கணமே
இடைச்சொல்லிற்குச்
சிறந்த உதாரணமாகத் *
தொன்று
தொட்டு எடுத்துக்
காட்டப்படும்
சுட்டுப்பெயர்க்குரிய இலக்
கணமாக
இச்சூத்திரத்திலும் அதன்
உரையிலும் கூறப்
பட்டிருக்கிறது என நாம்

நிர்மானிக்கவேனும்.

மக்கள்

* "சுட்டு முதலாகிய காரணக்கிளவி" என்ற சூத். உரையில் சேனு. 'அதனுல்' என்பதைச் சுட்டு முதற் பெயரோ டொப்ப தோரிடைச்சொல் என்ருர். 'எவ்வயிற் பெயரும்' என்ற சூத்.உரையில் அவரே அவ்வாய் என்பது 'ஆண்டு' என்னும் பொருள்பட்ட டிடைச்சொல் என்ருர். பொரு. மரபியல். 72. 'அந்தணர்' என்ற சூத். உரையில் "நூன் மரபினுள் ஓதிய மூவகைச் சுட்டினை டிடைச் சொலோத்தினுள் ஓதானுயினன்" என்று கவனிக்க.

2

18

தொல்காப்பியம்

விலங்குபோன்ற

சாதிச்சொல்லும் நன்மை
போன்ற பண்புச் சொல்லும்
பேறு மூப்பு முதலிய
போன்ற தொழிற் பெய
ரும் தம்மை ஒருவன்
கிளந்து உச்சரித்தவுடன்
அவ்வவற்
றிற்குரிய கருத்துக்களை
அவன் அறிவில் வேறொரு
சொல்லின் இடையீடின்றி
நேரே பதியச்செய்கின்றன.

ஆதலின்
சாதி, பண்பு, தொழிற் பெயர்
ஆகிய இம்மூவகைப்பெயர்கள்
பொருளொடு புணரும்
சொற்கள் எனக்
கருதப்பட்டன.
அவன் இவள்முதலிய
சுட்டுப்பெயரும்அச்சுட்டுப்பெயர்க்கு
இனமான எவன் போன்ற
வினுப்பெயரும், நான் நீ
போன்ற தன்மை
முன்னிலைப் பெயர்களும்

ஒருவன் ஒருத்தி போன்ற எண்ணுப்பெயரும் ஆக எல்லா இடைச் சொற்களும் யாவர் வாயிலும் எப்போதும் ஒரே பொருளை அல்லது கருத்தை, நியதியாய்க் குறிக்காமல் அவற்றை உச் சரிக்கும் நபர்கள் தோறும் உச்சரிக்கும் சமயங்கள் தோறும், வெவ்வேறு பொருள்களைக் குறிக்கின்றன. ஆதலின் இக்கூற்றுச் சொற்கள் வரைந்த பொருளொடு புணராச் சொல் எனக் கருதப்பட்டன.

இவ்விருவகைப் பெயர்களில் பொருளொடு புணருஞ் சொல்லானது பண்டைய ஆசிரியர்களால் உரிச்சொல் என வழங்கப்பட்டது. பொருளொடு புணராச்சொல்லானது இடைச்சொல்லென வழங்கப்பட்டது. இடைச்சொல்லின் உட்பிரிவுகளில் ஒன்றான சுட்டுச்சொல்லே இக்கிளவியாக்கவியற் சூத்திரத்தில் தனியே குறிக்கப்பட்டு இடைச்சொல்லிற்குரிய பொதுவிலக்கணம் அச்சுட்டுச்சொல் மாட்டு ஏற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. இச்சூத்திரம் பெயர்ச் செஞ்சொல்லைப்பற்றிய சூத்திரமாகையால் வினைச்சொல் இங்கே ஓதப்படவில்லை.

## சொல்லதிகார விளக்கம் 19

## இங்கே குறிப்பிட்ட உரிச்சொல்லானது

இங்கிலிஷ் இலக்கணத்திலுள்ள 'noun' என்ற வகைக்கு நேராகும் * இங்கிலிஷ் இலக்கணத்ின்கண் வரும் proper noun' conmon noun, abstract noun, verbal noun, collec- tive noun முதலிய

பாகுபாடுகளில் அடங்கும் தமிழ்ப் பெயர்ச் சொற்களெல்லாம் தமிழிலக்கணத்தில் உரிச்சொல் எனப்பட்டன. இடைச் சொல்லானது இங்கிலிஷ் இலக்கணத்தின் கண் அமைந்த 'pronoun' என்றவகைக்கு நேரானது.

பிற்காலத்தில் உரிச்
சொல்லானது சாதி
அல்லது திணை அல்
லது
பொருட்பெயர்ச்சொல்
என்றும் முன்னத்தின்
கிளவி அல்லது கருத்துப்
பெயர்ச்சொல் என்றும்
இருவகையாகப்
பிரிக்கப்பட்டது.
முன்னத்தின் கிளவி

தானும் பண்புப் பெயர், தொழிற்பெயர் (verbal noun) என இருவகை யாகப் பிரிக்கப்பட்டது. ஆகவே பெயர்ச் செஞ்சொல்லா னது மேற்காட்டிய உரைமேற்கோளில் சேனாவரையர் கூறு கிறபடி திணைப்பெயர்ச்சொல், பண்புப் பெயர்ச்சொல்,

தொழிற்பெயர்ச்சொல் என மூவகையாகப் பிரிக்கப் பட்டு அவை மூன்றும் பொருளோடு புணரா இடைச் சொல் லினின்றும் பிரித்துணரப்பட்டன.

## உரிச்சொல்லின் பிற்கால வரலாறு

பெயர்ச் செஞ்சொல்லிற்கு இடுகுறியாக ஆதியில் ஆசிரியர்களால் இட்டு வழங்கப்பட்ட 'உரிச்சொல்' என்னுங்

* தமிழில் 'இயற்பெயர்' என்பதன்கண் 'proper noun' அடங்கும்; தமிழில் சிறப்புப்பெயர் என்பது proper noun அன்று; அது ஒருவகைப் பொதுப்பெயர். கிளவியாக்கவியலிலுள்ள "சிறப்பினாகிய" என்ற சூத். பார்க்க.

காரணக் குறியானது
பிற்காலத்தில் அப்பெயர்ச் செஞ்சொல்
லினின்றும்
தோன்றியவையும்
அதனோடு கருத்தில் இயை
புடவையுமான
பெயர்த்தொகை
(adjective), வினைத்
தொகை (adverb)

என்னும் இருவகை ஒழிபுச்
சொற்களுக்

கும் ஆகுபெயர் விதியால்
இட்டு வழங்கப்பட்டது.
ஆதலின்

உரியியல் முதற்
சூத்திரத்தில் இசை, *
குறிப்பு, பண்பு என்ற

குறிகளால் பெயர்ச்
செஞ்சொல்லும் 'பெயரினும்
வினையினும்'

மெய்தடுமாறி' என்ற
தொடரால் பெயர்த்தொகை
வினைத்
தொகை ஆகிய அவாய்
நிலைச்சொற்களும்
'உரிச்சொல்'
என்ற குறியின்கீழ்
எடுத்தோதப் படுகின்றன.

உரியியல்

இரண்டாவது
சூத்திரத்தில் பெயர்ச்செஞ்

சொல்லின்வகை
கூறப்படுகிறது. அங்கே
'வெளிப்படுசொல்'
எனப்பட்டது
கட்புலனுக்கு வெளியாகும்
திணைப் பொருட் குரிய
உரிச்சொல். மேற்
சூத்திரத்தில் இசை
எனப்பட்டது
இவ்வெளிப்படு
சொல்லே. இரண்டாவது
சூத்திரத்தில்

வெளிப்படா உரிச்சொல்
எனப்பட்டது
கட்புலனுக்கு
வெளிப்படாமல்
புத்திக்குமட்டும்
புலனாகுவதும் முதல்
சூத்திரத்திற் கூறப்பட்ட
குறிப்பு, பண்பு என்ற
இருவகை
முன்னத்தின் கிளவிகளில்
யாதாம் ஒருவகையில்
அமைவது

மான உரிச்சொல்லைக்
குறிக்கும்.
'வெளிப்படுசொல்'
என்னும்
காரணவிடுகுறியில்
வெளிப்படுதல் என்பதற்கு
இக்கருத்துத்தான்
என்பது வேற்
றுமையியல் 7-வது
சூத்திரத்தில்
பிரயோகிக்கப்பட்டிருக்

கும் "வெளிப்படத்
தோன்றி" என்பதற்குச்
சேனாவரையர்
"செவிப்புலனாகத்
தோன்றி" என்று கூறிய
உரையிலிருந்து
துணியப்படுகிறது.

---

* பொருளதிகாரம் பொருளியல் 'முதற் சூத்திர உரையில்' 'இசை' என்பது பொருளைக் குறித்த ஓசை எனப்பட்டது.

## இடைச்சொல்

மேல் கிளவியாக்கம்
37-வது சூத்திரத்தில்
சுட்டப்
பட்ட வகைகளில் திணை,
பண்பு, தொழிற் குறிப்பு
முதலிய
பற்றி ஒரு பொருளை
வரைந்துணர்த்துவது

பொருளொடு
புணர்மொழியாகும்.
இவைதாம் உரியியல் முதற்
சூத்திரத்
தில் இசை, குறிப்பு,
பண்பு ஆகிய
கருத்துக்களுக்குரிய உரிச்
சொல்லாகக்
கருதப்பட்டன.

எஞ்சிய

பொருளொடு
புணராமொழியானது
சுட்டுப்
பெயர் முதலிய இடைச்
சொல்லைக் குறிக்கும்.
'இடைச்
சொல்' என்னும் குறி
ஆசியில் பெயரிலில்
கிளந்தோதப்.
படும் அவனிவன் உவன்
முதலாகிய செஞ்

சொல்லிடைச்
சொற்களையும்
அவற்ருேடு பிறப்பில்இயைபுடையவும் அவாய
நிலைக்கருத்தில்
வழங்குபவுமான
"அதனால், அவ்வாய்,
அந்த, அவ்வாறு"
முதலிய இடைமொழிப்புச்
சொற்களையும்
குறித்தது. இவ்விடை
மொழிப்புச் சொற்களைக்

குறிக்க

இடைச்' சொல்

என்னும் குறி,

ஆகுபெயர் விதியால்

. . .

வழஙகபபடடது.

கிளவியாக்கவியல்

'சுட்டுப் பெயர் முதலிய

காரணக்

கிளவி' என்ற

சூத்திரத்தின் உரையில்

சேனுவரையர் (அத
ஞல் என்னுஞ்) சுட்டு
முதலாகிய காரணக் கிளவி
உருபேற்று
நின்ற சுட்டு
முதற்பெயரோ
டொப்பதோ ரிடைச்
சொல்,
எனக் கூறுகிருர். இங்கே
சேனுவரையர் சுட்டுமுதற்
பெயரா கிய

செஞ்சொல்லே 'இடைச்சொல்' என்னும்குறிக்கு

உரித்து

என்றும் அதனினின்றும்

தோன்றிய வேற்றுமைச்

சொல்

அல்லது ஒழிபுச் சொல் சுட்டுமுதற் பெயரோ டொப்பதோ ரிடைச் சொல் என்றும் கருத்துப்படக் கூறுவது கவனிக்கத் தக்கது; 'இடையொழிபுச் சொல் ஆகுபெயர் மூலம் இடைச்

22

தொல்காப்பியம்

சொல் எனும் குறி பெற்றதால் சேனவரையர் இவ்வாறு சொன்னர்.

வேற்றுமையியலிலுள்ள "எவ்வயிற் பெயரும்' "என்ற சூத்திரத்தின் உரையில் அவரே 'அவ்வாய்' என்பது செஞ்

சொலாகிய
இடைச்சொற்பெயரன்மையின்
உருபேயன்றிப்
எழுவாய்க்குரிய
பயனிலையும்
ஏலாது என்றும் அது
இடைச்
சொல்லாய் 'ஆண்டு'
என்னும் பொருள்பட்டுநிற்கும் என்றும்
கருத்துப்படக்
கூறுவதில் 'அவ்வாய்'

என்ற இடையொழி
புச் சொல்லும்
'இடைச்சொல்' என்னும்
குறிக்கு உரித்து
என
அபிப்பிராயப்படுகிறார்.

இவ்வாறு
நாளடைவில்
செஞ்சொல்லிடைச்
சொல்

விற்கு 'இடை' என்னும்
குறி வழங்கப்படாமல்
அந்த, அவ்
வாறு முதலிய
இடையொழிபுகளுக்கே
அக்குறி வழங்கப்
பட்டது. *
கிளந்து கூறல்
சுட்டிக்கூறல்
ஆதிகாலத்தில்

‘Pronoun” என்பதற்கு

நேரான

இடைச்சொல்வகையை

உரிச்சொல்லாகிய

பொருட்பெயர்ச்

சொல்லினின்றும்

பிரித்து வேறு கூருகக்

கருதினுர்கள்

என்பதற்கு கிளந்து

கூறல், சுட்டிக்கூறல் என்ற

இருவகைக்
கூறல் முறைகள்
ஆசிரியர்களால் விதந்து
கூறப்படுவதே
ஆதாரம்.
கிளவியாக்கவியலிலுள்ள
'அப்பொருள் கூறிற்
சுட்டிக்கூறல்'' என்ற
சூத்திரத்தின் உரையில்
இருவகைச்
செப்பல் முறைகளுங்

குறிப்பிடப்படுகின்றன.

ஒன்று 'இப்

* "பிரிநிலை வினையெபெயரே" என்ற சூத். உரையில் வினை பெயர் என்பன ஆருபெயரால் வினை யெச்சத்தையும் பெயரெச் சத்தையும் உணர்த்தின எனச் சேனாவரையர் கூறிவது கவனிக் கத் தக்கது.



பயறல்லதில்லை' எனச்

சுட்டிக்கூறல்;

மற்ருென்று 'பெரும்
பயறல்லதில்லை' எனக்
கிளந்து கூறல் (Naming
a thing
by its direct and
definitive name
without the
aid of a pronoun).
இங்கே பொருளொடு
புணராமொழி
யான 'இது' என்பதன்

சுட்டுச் சினையெழுத்தைச் சேர்த்து

இப்பயறு என்ற வழிச் சுட்டிக்கூறல் (naming a thing by means of a pronoun) எனப்படுகிறது.

சுட்டுச்சினை

சேராது வரும் பெரும் பயறு என்னும் திணை

உரிச்சொல்
ஒலித் தனியே
உச்சரித்தவழி கிளந்து
கூறுதல் எனப்படு
கிறது. ஆதலின்
திணைப்பெயரானது
கிளந்து உச்சரிக்கப்
படவும் வேறொரு
வார்த்தையின்
உதவியன்றிக் குறித்த
பொருளை அச்சொல்

நேரே கருத்தில்
உணர்த்தும் எனவும்,
சுட்டுப்பெயரானது
(அல்லது இடைச்
சொல்) வேறு
திணைப்பெயரின்
உதவியின்றிக் கருதிய
பொருளைத் தானே
நேரே உணர்த்தாது
எனவும் இவ்வாறு
பொருளை உணர்த்

தும் முறையில்
திணைப் பெயராகிய
உரிச்சொல்லிற்கும்
சுட்டுப்பெயராகிய
இடைச்சொல்லிற்கும்
வித்தியாசம்
உண்டு எனவும்
சேனாவரையர் இங்கே
கூறுகிறார்.

உரி, இடை, என்ற
குறிகளின் காரணம்

பொருட்குரிய

இயற்கைச்

சொல்லாதலால் உரிச்

சொல்லானது*

அவ்வாறு

குறிப்பிடப்பட்டது.

ஒன்றற்

குரிய உரிமைப்

பெயர்க்குப் பதிலாக

அப்பெயரிடை வழங்

* திருக்குறளில் பிறர் மனையவாமை 'என்ற அதிகாரத்தின் குறட்பாக்களில் "பிறன் பொருளாள்" 'பிறனியலாள்" பிறர்க்குரியாள்" "பிறன்வரையாள்" என்ற தொடர்களில் பொருள், இயல், உரிமை, வரைவு என்னும் சொற்களின் ஒற்றுமைக் கருத்து கவனிக்கத்தக்கது.

# 24

# தொல்காப்பியம்

கப்படுவதுபற்றி

இடைச்சொல் அக்குறி

பெற்றது. உதவிச்

சொல்லோடு

வாக்கியத்தில்

வழங்காமல்

வாக்கியத்தின்
கண்ணன்றித் தனித்து
வழங்கு
நிலைமையில் 'அவன்'
போன்ற இடைச்
சொல்லானது
எப்பொருளையும்
பொதுவாய்க் குறிப்பதால்
'இடைச்சொல்'
எனப்பட்டது

எனவும் ஒன்று.

## நாற்கூற்றுச் சொல்லின் வைப்பு முறை

✓ பெயர், வினை, இடை, உரி என்ற நால்வகைச்சொல்லில் தற்கால இலக்கணப்படி 'இடை' என்பது அசைநிலையைக் குறிக்கும்; ஆதியிலும் 'இடை' என்பது

இப்போது
போலவே அசை
நிலையைக் குறித்திருந்தால்
இவ்வைப்பு
முறை ஏற்பட்டிருக்காது.
மேற்சொன்னபடி 'இடை'
என்
பது பெயரின்
ஒருவகையைக்
குறித்ததாற்றுன் பெயர்,
வினை என்ற சிறந்த

இருவகைகளுக்குப்பின்
'இடை' வைக்
கப்பட்டது நியாயம் என
நாம் உணருகிறோம்.
'பெயர்'
என்ற முதல் வகைக்கும்
'உரி' என்ற
கடைசிவகைக்கும்
பதிலாக 'இடைச்சொல்
பிரயோகிக்கப்படுவதால்
'இடை'

என்பதை உரிக்கு முன் வைத்ததும் நியாயமே.

## இடைச் சொல்லின் பிந்திய வரலாறு

பெயர், இடை, முன்னத்தின் கிளவி என்ற மூவகைப் பெயர்களில் 'இடை' என்னும் வகை பெயருடன் இணைக்

கப்பட்டு பெயரியலில்

அவன் முதலிய

இடைச்சொல் எல் லாம்

களைந்தோதப்பட்ட பின்

செஞ்சொற் 'பெயரில்'

இடை என்றவகை ஒழிந்தது.

அவ்வாய், ஆண்டு, அந்த, அவ்வாறு முதலிய சில இடையொழிபுச் சொற்கள் மட்டும் இடைச்சொல் என

வழங்கப்பட்டு

வந்தன. பின்னால் வினையெச்சம்

பெயரெச்சம்

ஆகிய இருவகைத் தொழில்
ஒட்டுச் சொற்களும்
திணைபாற் குரிய விகுதிகள்
பெருமையால்
இருதிணைக்கும்
பொதுவான குறிப்புச்
சொற்கள் எனப்பட்டன;

'இடைச்சொல்' என்பது குறிப்புச்சொல் என்ற கருத்தில் வழங்கப்பட்டு அவ் விருவகை எச்சங்களும் இடைச் சொல் எனப்பட்டன.

இடையியல்

இரண்டாவது சூத்திரத்தில் "வினைசெயன் மருங்கிற காலமொடு வருநவும்" என்பதில் இவ்விருவகை

எச்சங்கள் சுட்டப்

படுகின்றன; இங்கே

மருங்கு என்பது வழி

மருங்குச் சொல் அல்லது

ஒழிபுச் சொல்.

வேற்றுமை

மயங்கியலிலுள்ள

ஆகுபெயர்ச் சூத்திரத் தின்

உரையில் சேனாவரையர்

கூறுவதிலிருந்து

'வினையெச்ச மும்

பெயரெச்சமும் இடைச்
சொல்லாகக்
கருதப்பட்டன என்று
தெரிகிறது. அவர் அங்கே
கூறுவதாவது: வினை யெச்ச
முதலாயின வினைச்
சொல்லாதலும் இடைச்
சொல் லாதலு
முடைமையான் அவற்றை
வினையியலுள்ளும் இடை•
யியலுள்ளுங் கூறியவாறு

போல வென்க''

இக்கூற்றிலிருந்து "வினை செயன் மருங்கிற் காலமொடு வருநவும்" என்ற இடையியற் சூத்திரப் பகுதி இருவகை யெச்சத்தைக் குறித்தது என்பது உறுதியடைகிறது.

பிற்காலத்தில் பெயர், வினை, இடை, உரி என்ற நால் வகைகளில்

எவவகையான
வாய்ப்பாடுகளையும்
கொண்டுவர வேண்டும் என்ற
கொள்கை நிலவிற்று.
அக்காலத்தில் 'எச் சம்'
என்னும் குறிக்கு
உண்மையில் உரித்தான
அசைநிலை கள் யாவும்
'இடைச்சொல்'
எனப்பட்டு அவற்றிற்
குரிய சூத்திரங்கள்
இடையியலில்

அமைக்கப்பட்டன,

"தகிதங்
குறிப்பிற் பொருள் செய்குநவும்" என்ற இடையியல்

இரண்

டாவது சூத்திரப்பகுதி

இவ்வகை நிலைகளைக்

குறித்தது.

மறுபடியும் 'அசைநிலே' என்ற அற்பவகையையும் இரு வகை யெச்சங்களேயும் ஒரு சேர 'இடைச்சொல்' என்பது பொருத்தமில்லாததாகத் தோன்றிற்று. ஆதலின் "வினை

செயன்மருங்கிற் காலமொடு வருநவும்" என்பதற்கு வினைச் சொல்லின் ஈற்றில் வரும் கால விகுதி எனப் பொருள் செய் யப்பட்டது. இவ்வாறு காலவிகுதியைப் பிரித்து இடைநிலே எனக் கொண்டது

பண்டை ஆசிரியர்களின் கருத்துக்கு மாறானது என்பதற்குச் சேனவரையர் கூற்று ஓரிடத்தில் காணப்படுகிறது. அக்கூற்று வேற்றுமையியலிலுள்ள "கூறிய முறையின்" என்ற சூத்திரத்தின் உரையில் உள்ளது. அது வருமாறு:

"வினைச்சொல்லிறுதி

நிற்கும் இடைச்சொற்

றுமென வேறுணரப்படாது

அச்சொற் குறுப்பாய்

நிற்கு

மன்றே; இவை (வேற்றுமை யுருபுகள்) அவ்வாறு பெயர்க் குறுப்பாகாது தாமென வேறுணரப்பட்டு இறுதி நிற்கும்

"என்பார்

நிலைதிரியாதென்றார்"

இக்கூற்றிலிருந்து வேற்றுமை

யுருபைப்போல காலவுருபைப் பிரித்து இடைச்சொல்லென வேறு உணரப்படாது என்று தெரிகிறது. தொடரின் உறுப்

பான முதனிலையாகிய இடைச்சொல் வகையில் காலவுருபு சேர்க்கப்படாமல் மருங்குச் சொல்லான எச்சங்கள் சேர்க்கப்பட்டிருந்தன என நன்றாக நமக்குத் தெரிகிறது.

### சொல்லின் மூன்றாவது பாகுபாடு (Part of speech)

தொடரின் உறுப்பு... 'முதனிலை' என்ற குறி...வாய்பாடு...ஆறோட்டு:— சொற்றொடர் அல்லது வாக்கியத்தின் உறுப்பான ஒவ்வொரு கூற்றுச் சொல்லும் முதனிலை எனப்பண்டை ஆசிரியர்களால் குறியிட்டாளப் பட்டதாகத் தெரிகிறது. 'வினையே செய்வது' என்ற சூத்திரத்தில் தொழின் முதனிலை என்பது தொழிற்பொருளிற்



(verbal root) பிறந்த வினைச்சொல்,

பெயர்ச்சொல் ஆகிய
எவ்வகைச் சொல்லையும்
குறிக்கும்.
'இரண்டாகுவதே,
ஐயெனப் பெயரிய'' என்ற
சூத்திரத்தில்
சொற்றொடரில்
பயனிலையாக
வரும் வினைச்சொல்லும்
வினைக்குறிப்புச் சொல்
லும் முதனிலை என்ற

கருத்தில் 'முதல்' எனப்படுகின்றன.

இதற்கடுத்த "காப்பிஞெப்பின்' என்ற சூத்திரத்திலும்காப்பு முதலிய கருத்தில் வரும் வினைமுற்றானது 'முதனிலை' என்ற

பொருளில் முதற் பொருள் எனப்படுகிறது. 'அடை சினை

முதனிலை' என்பதில்
பெயர்ச்சொல்லானது
சிறப்பாக முத
னிலை எனப்படுகிறதே
யொழிய மற்ற
அடைச்சொல்லும்,
வினைச்சொல்லும்
முதனிலை' எனத்தகாது
என்று கருத்
தன்று. உரியியல்
முதற்சூத்திரத்தின்

உரையில் 'முதனிலை'

என்பது அவாய் நிலையாய்

வரும் பெயர்த்தொகை

(adjec-

tive), வினைத்தொகை

(adverb) ஆகிய

இருவகைக் கூறு'

களையும் சுட்ட

வழங்கப்பட்டிருக்கிறது.

முதனிலை எனப்படும்

இச்சொற்கூருனது
'வாய்பாடு'
  எனவும் கூறப்படுகிறது.
கிளவியாக்க வியலிலுள்ள
"செல
  வினும் வாலினும்"
என்னுஞ் சூத்திரத்தின்
உரையில் சேனு
  வரையர் "முற்றும், *
எச்சமும், ‡.
தொழிற்பெயருமாகி

செலவு முதலிய அத்தொழில் பற்றிவரும் வாய்பாடு பலவாயினும்;" என்று கூறுவதில் வாய்பாடு என்பது 'part of speech' என்பதற்கு நேரான 'முதனிலை'யைக் குறிக்க வழங்கப்பட்டிருக்கிறது. வாக்கியத்தின்

உறுப்பாகக் கருதப்படும்
இவ்வாய்பாடு
கள் தமிழில் பல உள.
அவற்றுள் சிறந்த
வகைகளைக்

* முற்று என்பது
செஞ்சொல் வினையை;
‡. தொழிற் பெயர்
என்பது verbal noun.

கிளவியாக்கவியல் முதற்
சூத்திரத்தின் உரையில்
நச்சினார்க் கினியர்
எடுத்துக் கூறுகிறார்.
அவர் கூறுவதாவது:
"சொல்லை எட்டு
வகையானும் எட்டிறந்த
பல்வகையானும் உணர்த்துப.
இரண்டு திணையும் ஐந்து
பாலும் எழுவகை வழுவும்
எட்டு வேற்றுமையும்

ஆறெழுத்தும் மூன்று இடமும் மூன்றுகாலமும் வழக்குஞ் செய்யுளுமாகிய இரண்டிடமும் என எட்டு வகையான் உணர்த்துப"

இவ்வுரை மேற்கோளின் கண் உள்ள விஷயம் இளம் பூரணரின் உரை யினும் காணப்படுகிறது.

இம்மேற்கோளின் கண் ஓதப்படுபவற்றுள்

இரண்டு

திணை ஐந்து பால் என்பதில் செஞ்சொற்களாகிய எழுவாய்ப் பெயரும் வினைமுற்றும் சுட்டப்படுகின்றன. இவைதாம் செவ்விய நிலைக்குரிய வாய்பாடுகள். (Primary or princi- pal parts of speech), எட்டு

வேற்றுமைகளில் எழுவாய்

ஒழிந்த எழு
வேற்றுமைகளும் ஆறெட்டு
என்பதன் கண்

சுட்டப்படும் பெயரொழிபு,
இடையொழிபு, வினை
யொழிபு

ஆகிய மூவகை
யொழிபுகளும்
வழிமருங்கு நிலைக்குரிய

வாய்பாடுகள்.

(Secondary parts of speech).

ஆதியில் 'எச்சம்' என்னும் குறியுடைய அசைநிலை என்ற வகை இங்கே இளம்பூரணராலும் நச்சினார்க்கினியராலும் எடுத்துக் கூறப்படவில்லை. எழுவகை வழு இவை

என்பன பின்னர்க்
கவனிக்கப்படும்.

ஆறெட்டு:—இனி
'ஆறெட்டு' என்பதன்கண்
சுட்டப்

பட்ட வாய்பாடுகள்
மேற்படி மூவகை
யொழிபுகள் என்

பன தாடா என்பதை
இவ்வியாசத்தில்
ஆராய்வோம்.

கிளவியாக்கவியல்

முதற்சூத்திரத்திற்குரிய உரையில்

இளம்பூரணர் 'ஆறெட்டு' என்பதிலுள்ள ஒட்டு என்றும்

சொல்லதிகார விளக்கம்


குறியை தொகுதிச் சொல் அல்லது புணர்மொழியைக்

(Compound word)
குறிப்பதாகக் கொண்டார்.
இது
தவறு. 'ஒட்டு' என்பது
வாக்கியத்தில் பெயர்ச்
சொல்
அல்லது வினைச் சொல்லை
அவாவி அல்லது
தழுவிவரும்
தனிமொழியாகிய
வாய்பாடு (part of

speech).

"Qualifying or adjunct word" என்பது இங்கிலிஷில் இதற்கு நேரான கருத்து.

'ஆறெழுட்டு' என்ற வரையறை எவ்வாறு ஏற்பட்டது?

மேல்செஞ்சொற் பாகுபாட்டைப்பற்றிநாம் ஆராய்ந்தபோது

செஞ்சொல்லானது
ஆதியில் உரிச்சொல்,
இடைச்சொல்,
வினைச்சொல் என
மூவகையாகக்
காணப்பட்டது எனக்கண்
டோம். (திணைச்சொல்,
பண்புச் சொல்,
தொழிற்பெயர்
ஆகிய மூன்றும் இங்கே
உரிச்சொல் எனப்படுகிறது.)

•

அம

மூவகைச்

செஞ்சொற்களோடு

இயையுடையனவாக அவற்

றின் ஒவ்வொரு

வகையினின்று இவ்விரண்டு

வகையுடைய

ஒழிபுச்சொற்கள்

பிறப்பதை நாம்

பார்க்கலாம்.

## 1. உரிச்சொல்

இவ்வகையினுள் உள்

வகையான
திணைச்சொல், பண்புச்
சொல், தொழிற்பெயர்
என்பவை
களுக்கு உதாரணங்களாக முறையே பொன், நன்மை, கெடுதி
என்னும் சொற்களை
எடுத்துக்கொள்வோம்.
இச்சொற்
களோடு இயைபுடைய
ஒழிபுச் சொற்கள் வருமாறு.
பொன்
னொத்த, பொன்னொத்து,

நல்ல, நன்ருய், கெடுதியுள்ள, கெடு-
 தியாய் என்பன. இவற்றில் பொன்ஞைத்த, நல்ல, 'கெடுதி
 யுள்ள' என்பவை பெயர்த்தொகை வாய்ப்பாடுகள் (Adjec-
 tive) எனப்படும். 'பொன்ஞைத்து, நன்ருய், கெடுதியாய்'
என்பன வினைத்தொகை வாய்பாடுகள்

(Adverb)எனப்படும்.
இவ்விருவகைத்தொகைக்
கூறுகள்பெயரொழிபு
எனப்பட்ட



வழிமருங்குச் சொற்கள்.
வேற்றுமையியலிலுள்ள "
பெயரி

ஞகிய
தொகையுமாருளவே ”
என்னும் சூத்திரத்திலும்
உரி
யியல் முதற்
சூத்திரத்திலுள்ள “
பெயரினும் வினையினும்
மெய்தடுமாறி” என்ற
அடியிலும் சுட்டப்பட்ட
சொற்
கூறுகள் இவ்விருவகைப்

பெயரொழிபுச் சொற்களே. இவையே 'ஒட்டு' எனவும்படும்.

2. இடைச் சொல்:—அவன், அவள் முதலிய இடைச் சொற்களோடு இயைபுடைய இடையொழிபுகள் 'அந்த,

அவ்வாறு என்பன. இவற்றில் 'அந்த' என்பது இடைச் சொற் பெயர்த்தொகை; அவ்வாறு, என்பது இடைச் சொல்வினைத் தொகை; இவை இடை யொழிபுகளான இருவகை ஒட்டுக்கள்.

3.

வினைச்சொல்:—வா,
வருகிறான் முதலிய
செஞ்சொல் வினையோடு
இயைபுடைய இருவகை
வினையொழிபுகள்
'வந்து, வந்த' என்னும்
இருவகை 'எச்சங்கள்'
இவை ஆதி
யில் தொழினிலை ஒட்டு

எனப்பட்டன.

பெயர் அல்லது உரி, இடை, வினை, என்னும் மூவகைச் செஞ் சொற்களோடு இயைபுடைய வழி மருங்குச் சொற் கள் இவ்வாறு ஆறு கூறுகளாகின்றமையை நாம் பார்க்கி றோம். * பெயரொழிபு

வகையில் இரண்டு, இடையொழிபு வகையில் இரண்டு வினையொழிபுவகையில் இரண்டு ஆக ஆறு வகை அவாய் நிலைச் சொற்கள் காணப்படுகின்றன. இவை தாம் ஆறெட்டு எனப்பட்டன.

*உரியும் இடையும் ஒருசோப் 'பெயர்' எனப்பட்ட பிற்காலத்தில் உரியொட்டு இரண்டும் இடை யொட்டு இரண்டும் ஆக நால்

வகை ஒட்டுக்களும் இருபெயரொட்டு எனப்பட்டன. ஆகு பெயர்ச் சூத்திரத்தில் கூறப்பட்ட இருபெயரொட்டு இதுதான்.

# சொல்லதிகார விளக்கம் 31

# மேல் எடுத்துக் காட்டப்பட்ட நச்சினார்க்கினியரின் உரைமேற் கோளிற் கூறப்பட்ட வேற்றுமை வாய்ப்பாடும்

பெயரையும் வினையையும் தழுவு
சொற்கூறாய்வருதலின் ஒட்டு
எனற் குரித்தாயினும்
அவ்வாய்ப்பாடு
மெய்தடுமாறுத
பொருட்பெயர், உருபுடன்
இணைக்கப்பட்ட
விரிசொல் லாய்ச்
சிறந்த சொற்கூறுன
படியால் தனக்குரிய பொருண்மை
விகுதி குறைந்து

மெய்தடுமாறிய ஒழிபுச்
சொல்லான ஒட்டி னின்றும்
பிரிக்கப்பட்டு அவ்
வேற்றுமை வாய்பாடு
ஒட்டு என்பதற்கு முந்திப்
பிரத்தியேகமாய் 'எட்டுவேற்றுமை'
என விதந்தோதப்பட்டது.
இவ்வாறு 'வேற்றுமைச்
சொல்' தனித்
துக்கிள.க்கப்படாவிட்டால்
ஆறெட்டு எவை என

வகைகுறிப் பிடுவதில் சிறிது
முட்டுப்பாடு தோன்றும்.
வேற்றுமைச் சொல்லினும்
பெயரைத் தழுவிவருவது,
வினையைத் தழுவி
வருவதுஎன
இருவகைஏற்படுகின்றபடியால் இருவகைஇடை
யொட்டிற்குப் பதிலாக
இருவகை வேற்றுமை
யொட்டைச் சேர்த்து
'ஆறேட்டு' எனக்கணக்குச்

செய்வதற்கு இடம்
ஏற்படும். ஆனால்
வேற்றுமைச் சொல்
மேற்காட்டிய உரை
மேற்கோளில் திணைபாற்
பொருள்களுக்குரிய
செஞ்சொல்லை அடுத்து
இரண்டாவதாகவும்
ஆறொட்டினின்றும்
பிரித்துச் சிறப்பாகவும்
சொல்லப்பட்டிருக்கிற

படியாலும் முற்காலத் தில்
இடைச்சொல் வகையானது
உரிச்சொல்லுடன் சேர்த்
துப் 'பெயர்' என ஒரு
சேரக் கூறப்படவில்லை
யானபடி யாலும், இருவகை
இடை யொட்டுடன்
சேர்த்து நாம் மேல்
அனுமானித்த பிரகாரமே
'ஆறொட்டு' எனக்
கணக்கு ஏற் பட்டிருக்க

வேண்டும். 'ஒட்டு'
என்னும் இக்குறி
தொகுதி மொழியைக்
(Compound word)
குறித்திருக்கவேண்டும்
என்பது அவ



சியமில்லை. பெயர்ச்

சொல்லாகிய

தனிச்சொல்லிலக்கணம்

பெயரியலிலேயே

தொடங்குகிறதென்று சேனவரையற்போற்

கூறாமல்

அவ்விலக்கணம் வேற்றுமையியலிலேயே

தொடங்கு வதாக

இளம்பூரணர்

கருதுகின்றபடியால் அவர்

வேற்று மைச் சொல்லைப்

புணர்மொழி

யன்று என்றும்
தனிச்சொல் லென்றும்
கொண்டார் எனத்
தெரிகிறது. ஆதலால் எட்டு
வேற்றுமை ஆறெட்டு
என இனம்பட
வரிசையாய்ச் சொல் வதில்
வேற்றுமைபோல ஒட்டு
என்பதும் ஆதியில் தனிச்
சொற் கூறாகவே
கருதப்பட்டிருக்கவேண்டும்.

வினையியன் முதற்

சூத்திரத்தின் உரையில்

சேனு

வரையர் "தொழினிலை

யொட்டுந் தொழிற்

பெயரும்...

இடைச்சொல்லும்

உரிச்சொல்லும்" எனக்

கூறிச் செல்வ

தில் 'ஒட்டு' என்னுங்குறி யாதோ ஒரு தனிச்சொற் கூற் றைக் குறிக்கப் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது என்பதில் ஐய மில்லை.

"பெயர்நிலைக்கிளவி காலந்தோன்று, தொழினிலை யொட்டும் ஒன்றலங்கடையே" என்ற சூத்திரத்தின் உரையில் தெய்வச்சிலையார் சேனாவரையர் போன்று 'ஒட்டு' என்பதை உவமவாசகமாகக் கொள்ளாமலும் புணர்மொழியைக் குறிக்கிறது என்று கருதாமலும் உண்டான், தின்றான், குழலன் கோட்டன், போன்ற தனிச்சொற் கூறுகளைக்

குறிப்பதாக உரையெழுதுவது கவனிக்கத்தக்கது.

வேற்றுமை மயங்கியலினுள்ள ஆகுபெயர்ச் சூத்திரத்தினும் 'இருபெயரொட்டு' என்பதுபெயரோடு இயைபுடையவும் பெயரையும் வினையையும் அவாவி நிற்பதுமான பெயர்த்தொகை (adjective) வினைத்தொகை (adverb) ஆகிய இருவகைத் தனிச்சொற் கூறுகளையேகுறிக்கிறது. பெயர்ப்பொருட்



குரிய சொல்லே
விகுதிபெறுமலும்
உரியவடிவம் மாறுமலும்
'கடிகா' 'நன்று
சொன்னாய்'

என்பவற்றிலுள்ள கடி, நன்று, என்பனபோல பெயரையும் வினையையும் அவாவி நிற்கும் கடமையைச் (function) செய்வதால் அச்சொல் ஆகு பெயர் எனப்பட்டது. ஆகுபெயர் யாவும் தனிமொழிக ளானபடியாலும்

இவ்வாகுபெயர்ச்
சூத்திரத்தில் வரும்
மற்றை இனங்கள்
தனிமொழிக்
கூறுகளானபடியாலும் இரு
பெயரொட்டு என்பதும்
இருவகைத்
தனிமொழிகளையே
சுட்டவேண்டும்.
ஆகுபெயர்ச் சூத்திரத்திற்
கூறப்பட்ட

இரண்டு பெயராகிய
ஒட்டும் இங்கிலீஷ்
இலக்கணத்தில்
பெயர்நிலையினின்றும்
வடிவு வேறுபடாமல்
பெயர்த்தொகை
(adj.) யாகவும்
வினைத்தொகை (adverb)
யாகவும் வழங்
குஞ் சொற்களுக்கு
நேரானவை. (Beauty

spot, iron

ring, do well என்னும்

உதாரணங்கள்

கவனிக்கத்தக்கன)

இவ்வுறுவகை

யொட்டுக்களில்

பெயர்ச்சொல் அல்லது

உரிச்

சொல்லோடியையுடைய

பெயர்த்தொகையும் .

வினைத்

தொகையும் உரியியல்
முதற் சூத்திரத்தில்
"பெயரினும்
வினையினும்
மெய்தடுமாறிய'
என்பதால்
சுட்டப்படுகின் றன.
'மெய்தடுமாறிய' என்றால்
"திணைபால்களுக்குரிய
விகுதி இல்லாததால்
பொருள் நிச்சயஞ்

செய்யாத" என்று கருத்து.

இனி வினைமுற்றோ

டியையுடைய ஒட்டுக்கள்

தொழி •

னிலை ஒட்டுக்களாகிய

பெயரொட்டு, வினையொட்டு

என்று

ஆதியில் முறையே

குறியிடப்பட்டுப்

பிற்காலத்தில் பெய

ரெச்சம் (adjectival or relative participle), வினை

யெச்சம் (adverbial participle), எனக் குறியிடப்பட்

டன.

இவை வினையியலில் வினைமுற்றோடு சேர்த்து உணர்த்

தப்பட்டன.

இடைச்சொற்பெயரோடு

இயைபுடைய

3

34

# தொல்காப்பியம்

இருவகை இடையொட்டுக்கள் (அந்த அவ்வாறு போன்றவை) சொல்லதிகாரச் சூத்திரங்களில் எங்கே உணர்த்தப்படுகின்றன என்று தெரிவிக்க உரையாசிரியர்கள் தவறிவிட்டார்கள். இடையியல் முதற் சூத்திரம் ஆதியில் இவ்விடை

யொட்டுக்களைக் குறித்தே ஏற்பட்டிருக்கலாம்.

இடை யெனப்படுவ பெயரினும் வினையினும்
நடைபெற்றியலும் தமக்கியல் பிலவே.

இச் சூத்திரத்தில் தமக்கியல்பிலவே என்பது தமக்கே குறிப்பிட்ட அல்லது இயல்பாயுள்ள பொருளில்லாதன என்னும் கருத்தில் அமைந்திருக்கிறது 'இயல்பில' என்பது "அந்த, அல்லது" போன்ற இருவகை யொட்டுக்களைக் குறிக்கலாம். அசை நிலைகள் இடைச் சொல் எனப்பட்ட பின் இவ்விடை யொட்டுக்களின் தன்மை நாளடைவில் மறந்து விடப்பட்டது.

# Analogy from English Grammar.

## 'ஆரேட்டின்'

இலக்கணத்தோடு
இங்கிலிஷ் இலக்
கணத்திலுள்ள ஒற்றுமை
இதர
பாஷைகளிலும்
பயின்றுவரும் அவாய்
நிலைச்
சொற்களின்
தோற்றத்திற்குரிய
இலக்கண விதிகளை நாம்
ஆராய்ந்தால், ஒட்டு

அறுவகையென
எண்வரையறை செய்
தகின் உண்மை நமக்கு
எளிதிற் புலப்படும்
இங்கிலீஷ்
பாஷைக்குரிய ஆக்ஸ்பர்டு
அகராதி (Oxford
Dictionary)
என்ற பேரகராதியில்,
'Participle' என்ற
சொல்லின்

அர்த்தத்தை விளக்கும்பொழுது அச்சொற் பிரயோகம் காட்டக்கூடிய மேற்கோள் ஒன்று அங்கே காணப்படுகிறது.

அம்மேற்கோள் வருமாறு:—

சொல்லதிகார

விளக்கம் 35

"1599 Stockwood: Rules of construction,

10. There are three kinds of adjectives, a noun

adjective, a pronoun adjective''

இம்மேற்கோளின் பெயரைத் தழுவிவரும் பெயர்ச் சொல்லுடன்

adjective and a participial

கருத்துத் தமிழில் வருமாறு:— அவாய் நிலைகளில் மூவகையுள இனைபுடைய பெயரவாய் நிலை இடைச்சொல்லுடன்

இயைபுடைய பெயர்
அவாய் நிலை,
வினைமுற்றுடன்
இயைபுடைய பெயரவாய்
நிலை.

இங்கே
adjective என்பதைப்
பெயரவாய் நிலை என
மொழி பெயர்த்திருக்கிறது.
[பெயரை அவாவும் அவா
நிலையே இம்மேற்கோளில்

சுட்டப்பட்டிருப்பதால்.]

பெயரவாய் நிலை அல்லது பெயர்த் தொகைக்குச் சொன்ன இப்பிறப்பு விதியை வினை அவாய் நிலை அல்லது வினைத்தொகைக்கும்(Adverb) நாம் கொண்டால் "வினையை அவாவிவரும் மூவகையான வினைத்தொகைகள் (Adverb) உள. அவை

பெயர்ச்சொல்லுடன் இயைபுடைய வினை அவாய் நிலை, இடைச்சொல்லுடன் இயைபுடைய வினை அவாய் நிலை, வினைமுற்றுடன் இயைபுடைய வினை அவாய் நிலை (வினையெச்சம்)" என்ற உண்மையும் புலப்படும்.

ஆகவே

இருவிதிகளின் மூலம் ஆறெட்டின் பிரப்பு விளக்கப்படுகிறது.

விஞ்ஞான கலையின் மற்றக் கிளைகளிற் போல, இலக் கண சாஸ்திரத்திலும் ஒரேவிதமான உண்மைகள் அவ்வப் பாஷைக்குரிய ஆராய்ச்சியாளரின் அநுபவத்திலிருந்து வெவ்

வேறாகவும் புதிதாகவும் தோன்றுகின்றபடியால் தமிழிலக்கணத்திற்கும் இதாபாஷையின் இலக்கணத்திற்கும்



இடையே அமைந்து கிடக்கும் உண்மை நுண்ணிதின் உணர்வார்க்கு ஆச்சரியத்தை விளைக்கக்கூடியதன்று.

## நான்காவது பாகுபாடு

(பிறப்புப்பற்றி):—மேற்
சொன்
னதிலிருந்து
இடையியலிற் கூறப்பட்ட
'ஏ, ஓ, முதலிய
அசைநிலைகளைத் தவிர்த்து

தமிழில் 7 வாய்பாடுகள்
அல்லது
முதனிலைகள் உள எனக்
கண்டோம்.

அவையாவன்;
பெயர், வேற்றுமைச்
சொல், பெயர்த் தொகை,
வினைத்தொகை,
வினைமுற்று, வினையெச்சம்,
பெய
ரெச்சம் என்பன.

இவ்வேழு

வாய்ப்பாடுகளும் தாம் பிறந்த

பொருளின்

(root) வேறுபாடு

நிமித்தம் பெயர் நிலைக்

கூறு, தொழினி

லைக் கூறு, என

இருவகையாக

வகுக்கப்பட்டன. பெயர்

நிலைக் கூறில் வருபவை
எழுவாய், பெயர்த்தொகை,
வினைத்
தொகை,
வேற்றுமைச்சொல்
என்னும் நான்குமாம்.
தொழினிலைக்
கூற்றில் வருபவை மற்ற
மூன்று வகை
யும்.
பெயர் வகையிற்

சில தொழிற்
பொருளினின்று பிறந்
தனவாகக்
காணப்பட்டன. இவை
உண்டல், தின்றல்
போறை தொழிற்
பெயரும் உண்டவன்,
தின்றவன் போன்ற

வினையாலணையும் பெயரும் (இது சொல்லதிகாரத்தில் வினைப்பெயர் எனப்பட்டது.),

ஆகவே பெயர் நிலைக் கூறுகள்' என்ற வகையில் பெயர்ப் பொருளினின்றும் பிறந்த சொற்கள் மாத்திரமன்றி,தொழிற் பொருளினின்றும் பிறந்த பெயர்களும் அடங்கின. இவ்விரு வேறு வகைப் பெயர்களை நோக்கித்தான் வேற்றுமையியலி லுள்ள

சொல்லதிகார

விளக்கம்
37

"பெயர் நிலைக்கிளவி
காலம் தோன்றா
தொழினிலை ஒட்டும்

ஒன்றலங் கடையே"

என்ற சூத்திரம்
இயற்றப்பட்டிருக்கிறது.
இச் சூத்திரத் தின்
கருத்து: பெயர்ப்
பொருளினின்று
(Nominal root)
தோன்றிய எழுவாய்,
பெயர்த்தொகை,
வினைத்தொகை,
வேற்றுமைச் சொல் ஆகிய

கூறுகளில் கால ஈறு அல்லது
கால உருபு வருவதில்லை.
அவை காலம் தெரிவியா.
தொழிற்
பொருளி (Verbal root)
னின்று தோன்றிய
பெயர்களி லும் காலம்
காட்டும்
ஒரு கூறுகிய வினையாலணையும்
பெயர்
தவிர, வேறு கூறுகிய
தொழிற் பெயர் (Verbal

noun) கால ஈறு பெறுது;
இவ்வகை உண்டல,
தின்றல் போன்றன.
சூத்திரத்தின் இரண்டாவது
அடியில் 'காலந்தோன்று'
என்பது வருவித்து உரைக்கவேண்டும். 'ஒட்டு'
என்பதில்'உம்' இறந்தது
தழுவிய எச்சம்;
ஒட்டு என்பதற்கு இங்கே
தோன்
றிய கிளவி (derivative
word) என்பது கருத்து;

சேனா வரையர்
கூறுவதுபோல்
உவமவாசகமன்று. ஒட்டு
என்பது
இங்கே தனக்குரிய
'அவாய் நிலை' என்ற
பொருளிலும் வழங்
கப்பட்டவில்லை. இனி
இந்நால்வகைப் பெயர்
நிலைக் கூறுக
ளும்
வேற்றுமையியலில் உணர்த்தப்படுகின்றன.

எழுவாயும் இரண்டு முதல் 7 வரையுள்ள வேற்றுமைச் சொற்களும் இவ்வியலில் உணர்த்தப்பட்டிருப்பது யாவரும் தெரிந்த விஷயம். நான் இங்கே கவனிக்க முயல்வது பெயர்த்தொகை,

வினைத்தொகை ஆகிய இருவகைகள் தாம்.

"பெயரினாகிய தொகையுமாருளவே, அவ்வும் உரிய அப்பாலான" என்னும் சூத்திரம் இவ்விருவகைத் தொகைகளைப் பற்றித்தான்.

இச்சூத்திரத்தின் கருத்து:—பெயர்ப் பொருளினின்று

தோன்றிய பாலறி கிளவியாகிய செஞ்சொல் கிளவியாக்க



வியல் 11-வது சூத்திரத்தில் சுட்டப்பட்டது. வேற்றுமை யியலில் அச்சொல்லே எழுவாய்ப் பொருள் என்னும் பெயரில் மேல் உணர்த்தப்பட்டது. பாலறிகிளவிபோல அப் பெயர்ப்பொருளிலிருந்து வழிமருங்குச்சொல் அல்லது பெயரொரொழிபு எனப்படும் இருவகைத் தொகைச் சொற்களாகிய முதனிலை (அல்லது தனிமொழி)யும் உண்டாகும். அத் தனிமொழிகளும், பெயர் அல்லது எழுவாய்போன்று, தமக்கு உரிய முடிபு அல்லது பயனிலையை ஏற்றுவரும். இச் சூத்திரத்திற்கு முந்தின "பொருண்மை சுட்டல்" என்ற சூத்திரத்தில் பெயர்ப் (எழுவாய்க்கு) பயனிலைகள் வகை கூறப்பட்டன; இங்கே இருவகைத் தொகைகளும் அவை

களுக்குரிய குறியால் மட்டும் சுட்டப்பட்டுத் தொகைப் பயனிலை விவரமும் உணர்த்தப்பட்டது. இவ்விருவகைத் தொகைகளும் உரியியல் முதற்சூத்திரத்தில் மறுபடியும் தெளிவாய் உணர்த்தப்படுகின்றன.

இச் சூத்திரத்தில் 'தொகை' என்பது புணர்மொழியைக் குறிக்காது; தனிமொழியைக் குறிக்கும். வேற்றுமையியல் முதற் சூத்திரத்தின் உரையில் இளம்பூரணர் "நால்வகைப்பட்ட சொற்களையும் (கிளவியாக்கவியலிற்) கூறிப் போந்தான். அவற்றுள் முதலாவது பெயர்ச்சொல், அதனது இலக்கணம் உணர்த்திய எடுத்துக் கொண்டான்" என்று கூறுகிறார். இதிலிருந்து இவ்வியலில் உணர்த்தப்படும் 'தொகை,' என்பதும் தனிமொழியையே குறிக்கும் என நாம் உணர வேண்டும்.

# தொகை என்ற முதனிலையானது தொடரில் வருங்கால் இயல்பாகவும் வரும் உருபேற்றும்வரும்;

'கருப்புத்துணி, நன்று இயற்றினான்' என்பவற்றில் இயல்பாய் வந்தன. 'கருப்



பான துணி, நன்றாய் யியற்றினான்' என்பவற்றில் இருவகைத் தொகைகளும் உருபேற்று

வந்தன. சேனாவரையர் இவ்
வுருபுகளைப்
பிறசொல்லுருபு எனக்
குறியீடு செய்வர்; அவர்
கருத்து, வேற்றுமைச்
சொல்லிற்கே
இலக்கணப்படி உருபு
உண்டு என்பது.
உருபேற்றுவரும்
தொகைச் சொல்லைச் .

சேனாவரையர் ஒருவகை வழுவெனக் கருதினார் போலும்.

உருபேற்று வராத இருவகைத் தொகைச் சொற்களாகிய தனிக்கிளவிகள் தான் ஆகுபெயர் சூத்திரத்தில் 'இரு பெயரொட்டு,' என உணர்த்தப்பட்டவை.

கிளவியாக்க வியலில்

இனச் சுட்டில்லாப் பண்பு
கொள் பெயர்க்கொடை"
என்ற சூத்திரத்திலும்
அதன் உரையிலும்
"வட, தென், செம்,
வெண், கோள், பெரும்"
முதலான
பெயர்த்தொகைக் கூறுகள்
தனி வகையாக எடுத்துப்
பேசப்படுகின்றன.
அப்படிப்பட்ட

சொற்கூறுகளுக்குப்

பெயரிலக்கணம் கூறும்

இவ்வேற்றுமை யியலில்

இலக்கணம் கூறப்படுகிறது.

இருவகைத்

தொகையாகிய

அவாய்நிலைகளை உரை

யாசிரியர்கள்

அங்கீகரியாமையின்

காரணம் :—

பெயர்த்தொகை:—வடமொழி

யிலக்கணத்தில் பெயரை
அவாவிவரும்
அவாய்நிலையானது தான்
கொண்டு முடி
யும் முடிபுக்
சொல்லான
பெயர்க்குரிய
வேற்றுமை
யுருபையே பெற்றுவரும்;
தனக்கென வேறுருபு
பெறாது.

அவ்விலக்கணத்தைப்போலல்லாமல்
தமிழில் முடிபுப் பெயரி
னின்றும் பிரிந்து
தனக்கென வேறுருபு
ஏற்கும் பெயர்த்
தொகைச் சொல்லே
உரையாசிரியர்கள் வழூவு
முறை எனக்
கருதி அவ்வகையை
அவர்கள்
தமிழிலக்கணத்தில் அங்கீ

கரிக்கவில்லை.



வினைத்தொகை:—

வினையியலி லுள்ள

"அன்மை யின்மை" என்ற

பெயர்ப்பயனிலைச் *

சூத்திரத்தின் உரையில்

"பண்புக்குப் பண்பு

கிடையாது",

எனச்சேனாவரையர் கூறு

கிறார். குணப்பண்புச்

சொற்போன்று

தொழிற்பண்பும் பெயராகிய

பொருளின் பண்பு என்று

கருதப்பட்டதால்

தொழிற்பண்பாகிய

வினைச்சொல்லை பெயரின்

கிரியாகிய

வினைத்தொகைக்கூறும்

தழுவுவதாகச் சொல்வது
நியாய மன்று எனக்
கொண்டு உரையாசிரியர்கள்
தமிழிலக்கணத்தில்
'வினைத்தொகை' என்ற
கூற்றை அங்கீகரிக்கவில்லை.
இது மயங்கிய
தர்க்கத்தின்மேல்
ஏற்பட்டது.

மேற்காட்டிய
மயக்கங்களால்

சொல்லதிகாரத்தில்
மூலச்சூத்திரங்களிலுள்ள
உண்மைக் கருத்தை
உரையாசிரி
யர்கள் கூறவில்லை.

தொழிநிலைக் கூறுகளாகிய
மூவகை வினையும் அடுத்த
பிரிவில்உணர்த்தப்படும்.

# ஐந்தாவது

## பாகுபாடு (பொருண்மை, குறிப்பு.)

## பெயரியல் முதல்

ஐந்து சூத்திரங்கள்:—
பெயரியி லுள்ள
இவ்வைந்து
சூத்திரங்களும் சொல்லின்
பொது விலக்கணம்
உணர்த்துகின்றன.

கிரமப்படி இவை சொல்லதிகாரத்தின் தொடக்கத்தில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.

இவ்வைந்து சூத்திரங்களுள் இரண்டாவது சூத்திரத்தில் சொல்லானது பொருண்மைச் சொல் என்றும்

---

* இக்குறி ‘குறிப்புவினைமுற்று’’ என்ற கருத்தில் உரையாசிரியர்களால் பிரயோகிக்கப்படுகிறது. வினைப்பயனிலை என்ற வகை

யினின்றும் பிரித்துக்காட்ட இக்குறி வழங்கப்படுகிறது.

சொன்மைச் சொல் என்றும் இருவகையாகப் பகுக்கப் படுகிறது.

பொருண்மைச் சொல் என்பது திணை பால் இடம்

காலம் ஆகிய
பொருள்களைச்
சிறப்பாகவாவது
பொதுமை

அல்லது குறிப்பாகவாவது
தெரிவிக்கும் சொல்.
இவ்விபரம்

பெயரியல் மூன்றாவது
சூத்திரத்தில் தெரிபு
வேறு நிலையல்

(சிறப்பு) என்றும்

குறிப்பிற் றோன்றல்
(பொதுமை) என்
றும் சொல்லப்படுகிறது

## பெயரியல்

நாலாவது சூத்திரத்தில்
பொருண்மைச்
சொற்றான் பெயர், வினை,
என இரண்டு
செஞ்சொற்களாகப்

பகுக்கப்படுகிறது.

இவற்றில் பெயர்ச்

செஞ்சொல்

எழுவாயாகவே வரும்;

வினைச் செஞ்சொல்லானது

வினைமுற்று எனப்படும்.

பெயரியல் ஐந்தாவது

சூத்திரத்தில் சொன்மை

நிலைச்

சொற்கள்

உணர்த்தப்படுகின்றன

இவை இச்சூத்திரத்தில்

வழிமருங்குச் சொற்கள் எனப்படுகின்றன; இவை ஒழிபுச் சொற்கள் எனவும் படும். இவை இருவகைய: பெயரொழிபு,

வினையொழிபு என்பன.

பெயரொழிபும்

பெயர்த்தொகை

(adjective) வினைத்

தொகை (adverb) என

இரண்டாகவரும்.

வினையொழிபு
வகையானது வினையெச்சம்
பெய்ரெச்
சம் என இரண்டு.

பெயர்த்தொகை,
வினைத்தொகை ஆகிய
இருவகையும்
சொல்லதிகாரத்தில்
இரண்டு இடங்களில்

உணர்த்தப்படு

கின்றன. ஒன்று

வேற்றுமையியலிலுள்ள

"பெயரிஞகிய

தொகையுமாருளவே" என்ற

சூத்திரத்தில்;

மற்ருெரு

இடம் உரியியல்

முதற்சூத்திரத்திலுள்ள "பெயரினும் வினை யினும் மெய் தடுமாறி" என்னும் பாகம்.

வினையொழிபாகிய வினையெச்சமும் பெயரெச்சமும் வினையியலில்

உணர்த்தப்படுகின்றன. இவையே இடையியலி லுள்ள இரண்டாவது சூத்திரத்திலும் "வினைசெயன்மருங் கிற் காலமொடு வருநவும்" என்ற அடியிலும் உணர்த்தப் படுகின்றன.

இடை, உரி, என்ற குறிகள் ஆதியில்

பெயர்ச்சொல்லே
உணர்த்தின. பிற்காலத்தில்
இருவகைத்
தொகைச்சொல்லும்
'உரி' என்னும் குறியால்
ஆளப்பட்டன. இருவகை
எச்சங்
களும் 'இடை என்னும்
குறியால் ஆளப்பட்டன.
இப்பிற்
கால

ஆட்சியைப்பின்பற்றிப்
பெயரியல் ஐந்தாவது
சூத்திரத்
தில்
வழிமருங்குச்சொற்கள்
இடை, உரி என்ற
குறிக
-ளால்
சுட்டப்படுகின்றன.
இவ்வொழிபுச்

சொற்கள் திணைபால்
இடம் ஆகிய
கருத்துக்களை
உணர்த்தாது வாளா
சொல் மாத்திரமாய்
நிற்றலின்
'சொன்மைநிலை'
எனப்பட்டன. (சொன்மை
என்
பதற்குச் சேனாவரையர்
கூறும்உரை

பொருத்தமன்று; தெய்வச்சிலையார்
வேறுவிதமாக உரை
கூறுகிருர். ஆனல் இங்கே கூறப்பட்டதுதான் நேரிது
எனத்தோன்றுகிறது).
இனி பெயரியல் மூன்ருவது
சூத்திரத்தின்
தன்மையை நன்ருய்க்

கவனிப்போம்.

இங்கே பெயரும் வினையும் ஆகிய இருவகையில் ஒவ்வொன்றும் இருவகையாகப் பிரிக்கப்படுகிறது.

பெயரானது தெரிநிலைப்பெயர், குறிப்புப் பெயர் என

இருவகையாகப்
பிரிக்கப்படுகிறது.

சொல்லதிகார விளக்கம்
43

உரிய விகுதிகளைத்
தம் ஈற்றில் பெற்றுவது
இயற்கை
யாகவாவது திணைபால்
எண் இடங்களுக்குரிய
பொருள் களில் யாதானும்

ஒன்றைச் சிறப்பாக
உணர்த்தும் பெயர்ச்
சொற்கள்
தெரிநிலைப்பெயர்கள்
எனப்படும்.
அஃறிணைபால்
எண் இடங்களில்
யாதானும் இரண்டு
அல்லது அவ்வெண்
ணிற்கு மேற்பட்ட பொருள்களைப் பொதுவாக
உணர்த்தும்

விரவுப்பெயர்கள்
குறிப்புப் பெயர்ச்சொற்கள்
எனப்படும்.

சொல்லதிகாரம்

பெயரியலில்
கிளந்தோதப்படும்

அவன் இவன் உவன்
முதலியனவும் மகன் மகள்
முதலிய

னவும் "தெரிபு வேறு
நிலையல்" என்பதன்

கட்படும் தெரி
நிலைப்பெயர்; மறுபடி
பெயரியலில்
உணர்த்தப்படும் இயற்
பெயர், சினைப்பெயர்,
சினைமுதற் பெயர், தாய்,
தந்தை முத
லிய முறைப்பெயர்,
தன்மைப் பெயர்,
முன்னிலைப் பெயர்,
தான், எல்கலாம்,

ஒருவர் முதலிய பெயர்கள்
ஆகிய இப்
பெயர்களெல்லாம்
குறிப்பிற்றோன்றல்
என்பதன் கட்படும்
குறிப்புப் பெயர்.
[குறிப்புப் பெயர்
எனினும் விரவுப்
பெயர் எனினும் ஒக்கும்;
இக்குறிகளும் நன்னூலார்
கூறும்.

* "பொதுப் பெயர்"
எனும் குறியும் ஒரே
பொருளன]
சொல்லதிகாரம்
பெயரியலில் "நீயிர் நீயென"
என்னுஞ்
சூத்திரத்தில்
"உடன்மொழிப்
பொருள்" எனப்பட்டது
குறிப்புச் சொல்.
உடன்மொழிப் பொருள்

* நன்னூலார் தம்முடைய நன்னூல் பெயரியல் 25-வது சூத்திரத்தில் "முதற் பெயர் நான்கும்.....முறையிரண்டும் தன்மை நான்கும் முன்னிலை ஐந்தும், எல்லாம் தாம் தான் இன்னன பொதுப்பெயர்" என்று

கூறப்பட்டவை, தொல்
சொல்லதிகாரம்
பெயரியலில் "ஒன்றிய நிலை,
குறிப்பு, உடன்மொழி,
முன்னம்."
என்ற குறிகளால்
குறிப்பிடப்பட்ட பெயர்களே.

பொதுப்பாற் குரிய சொல் (Word of Common gender)

என்று அர்த்தம் ["நீயிர் நீ யென்" என்ற சூத்திரத்தின் உரையில் சேனாவரையர் 'பால்' என்பதைத் திணையாகக் கொண்டது தவறு.]

செஞ்சொல் வினை.

இனி

வினைமுற்றானது குறிப்பு வினை, தெரிநிலை வினை என இருவகைப்படும்.

பெயரியலிலுள்ள மூன்றாவது சூத்திரத்தில் காணப்படும் பாகுபாட்டை அநுசரித்தே வினையியல்

4-வது சூத்திரம்

இயற்றப்பட்டிருக்கிறது. இந்நாலாவது சூத்திரத்தில் "குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றி" என்னும் வார்த்தைகளால் இப்பாகுபாடு சுட்டப்

படுகிறது. காலத்தைத் தெளிவாய்க் குறிப்பிட்டுத் திணை பாலிடங்களுக்குரிய பொருள்களைப் பொதுவாகத் தெரிவிக்கும் "சென்றேன், சென்றனை" என்பன. போன்ற வினை முற்றுக்கள் 'குறிப்பு வினை' என்னும் குறிபெறும்; காலத்

தைத் தெளிவாய்க் குறிப்பிடுவதுடன் திணை பாலிடப்

பொருள்களையும்
தெளிவாய்த் தெரிவிக்கும்
"சென்றான்,
சென்றாள், சென்றது";
என்பனபோன்ற
வினைமுற்றுக்கள்
தெரிநிலை வினை
என்னும் குறிபெறும்.

வினையியல் 4வது
சூத்திரத்தில் 'நெறிப்பட'

என்பது செஞ்சொல்லின் தன்மையைக் குறிக்கும். 'முற்று' என்பது செஞ்சொல்லன்று; "செய்கு, காணகு," என்பனபோன்ற

எச்சங்கள் தன்மையிடத்தை வரைவதின், முற்று (Finite verb) எனப்படும்; செஞ்சொல் வினை என்பது தனக்குரிய முழு வடிவமும் குறையாது வருவது. (Verb of perfect form); இதேபோன்று விரவுவினை வேறு; குறிப்புவினை வேறு; 'வந்து, வந்த' என்பனபோன்ற குறைந்த வடிவுடை

வினைகள் திணைபாற்களைப்
பொதுவாய்
உணர்த்துவதால் விரவுவினை
எனப்படும்; இவை
'குறிப்பு' எனப்படா;
குறிப்பு வினையானது
செஞ்சொல்லாய் முழு
வடிவுடையதாகவே

யிருக்கும். இக்குறிகள்
உரையாசிரியர்களால் பல
தடவை பிறழவும்
பிரயோகிக்கப்படுகின்றன.

குறிப்பு வினை:—இது
நால்வகைப்படும்: 1.
தன்மை வினை. 2.
முன்னிலை வினை. 3.
உயர்திணைப் படர்க்கைப்
பன்மைவினை (பாலைப்
பொதுவாக

உணர்த்துகின்றபடியால்). 4. வியங்கோள் (திணைபாலிடத்தோடு இறந்த காலத்தையும் பொதுவாக உணர்த்தும்).

1. தன்மை

வினா:—சொல்லதிகாரம் வினையியலில் உணர்த்தப்படும் தன்மைப் பன்மை உரைக்குஞ் சொல்லும்

தன்மை ஒருமை
உரைக்குஞ் சொல்லும்
‘தன்மை வினை’
என்பதன் கட்படும்.

[செய்கு, செய்கும்,
கொண்மார் முதலிய
வினையொழி புக்
சொற்களுக்குரிய விதிகள்
செஞ்சொல்லாகிய தன்மை
வினை விதிகளுடன்
உணர்த்தப்பட்டிருப்பது

முறை தவறு; இவை
வினையியலில் பின்னல்
வினையெச்சம் பெயரெச்சங்
களுக்குரிய விதிகளுடன்
சேர்த்து உணர்த்தப்படல் முறை.
இவ்வினை யொழிபுகள்
முற்று எனற்
குரியவாயினும் செஞ்
சொல்லல்ல.]

2.

முன்னிலை வினை:—தன்மை

வினைபோல் உயர்திணை யில்
மட்டும் இது வழங்கற்
குரித்து; தன்மை
வினைபோல
ஆண்பால் பெண்பாற்களுக்குப் பொதுவாய் வருவதால் முன்
னிலை வினையும் காலம்
காட்டும் குறிப்பு வினையே.
குறிப்பு
என்றால் இங்கே பாற்
பொது என்று அர்த்தம்.

முன்னிலை வினையின் தன்மையைத் தெரிவதற்கு பெயரியலிலுள்ள முன்னிலைப் பெயர்ச்சூத்திரம் உதவுகிறது; "நீயிர் நீயென வரூஉங் கிளவி, பால் தெரிபிலவே உடன்மொழிப் பொருள" என்பது அச்சூத்திரம். இச்சூத்திரத்தில் பால் என்பது ஆண் வகை பெண் வகைக்குரிய கூறுபாட்டைக் குறிக்கும்; திணையைக் குறிக்காது. சேனவரையர்

'பால்' என்பதைத் திணை
எனக் கொண்டது. தவறு.
உடன்
மொழிப் பொருள்
என்றால் பாலைப்
பொதுவாகக் குறிக்கும்
சொல் (Word of
Common gender)
என்பது கருத்து.
ஆதலின்
முன்னிலைப் பெயர்போல

முன்னிலை வினையும்
பால் வகையைப்
பொதுவாக
உணர்த்தும், வினையியலிலுள்ள
26, 27 வது
சூத்திரங்களில், முறையே
முன்னிலை யொருமை
வினையும் முன்னிலைப்
பன்மை வினையும்
உணர்த்தப்படுகின்
றன. அச்சூத்திரங்கள்

வருமாறு:—

அவற்றுள் முன்னிலைக்

கிளவி

இ, ஐ, ஆய் என

வரூஉ மூன்றும்

ஒப்பத் தோன்றும்

ஒருவற்கும் ஒன்றற்கும்

(26)

இர் ஈர் மின் என

வரூஉ மூன்றும்

பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோரனைய என்மனார் புலவர்.

(27)

இச்சூத்திரங்களில் சுட்டப்பட்ட வினைச் சொற்கள் ஆண்பால் பெண்பால்களுக்குப் பொதுமையா யிருத்தலால் குறிப்பு வினை எனப்படும்;

பிற்காலத்தில் இக்காரணம்
நழுவ
விடப்பட்டு அதற்குப் பதிலாக
இவ்வினைகள் உயர்திணை
அஃ
றிணைகளுக்குப்
பொதுவானவை எனப்
போலிக்காரணம்
கூறப்பட்டது. "குயிலே
உண்டாயோ" என்பது
போன்ற

அஃறிணைப் பொருள்

விளிக்கப்படும்

உதாரணங்களிலும்

சொல்லதிகார விளக்கம்

47

வினைச்சொல்

உயர் திணையே.

உண்மையில் குயிலுக்குச்

சொன்னதன்று

இத்தொடர்; குயிலுக்குச்

சொன்னது

போற்பாவனையே. இது வழுவமைதியாகிய செய்யுண்மரபு.

இவ்வாறு சொல்வதற்குச் சொல்லதிகாரம் எச்சவியலில்,

வாராமாபின வரக் கூறலும்

என்ன மாபின எனக்

கூறலும்

அன்னவை யெல்லாம் அவற்ற றியல்பான்
இன்ன என்னும் குறிப்புரை யாகும்"

என்ற சூத்திரம் ஆதாரம்.

செய்யுள்வழக்கில் வரும்

இக்

குறிப்புரையின்

(personification)

தன்மையை அறி

யாது முன்னிலை

வினையைப்பற்றிய மேலிரண்டு சூத்திரங் களும் பிற்காலத்தில் இயற்றப்பட்டிருக்க வேண்டும். ஆத லின் இச் சூத்திரங்களில் முன்னிலை வினைகள் 'பாற்பொதுக்

குரிய' எனப்படாமல் 'திணைப் பொதுக்குரிய' எனத் தவறுதலாகக் கூறப்படுகின்றன.

## 3. உயர்திணைப் படர்க்கைப் பன்மை

வினா:—வினை யியல் 9-வது
சூத்திரத்தில்
உணர்த்தப்படும் பல்லோர்
'மருங்
கிற படர்க்கைச்
சொல்லானது ஆண்
பெண்பால்களுக்குப்
பொதுவாயிருப்பதால்
குறிப்பு வினையே.
அஃறிணைச் சொற்
குத் தமிழிற் பாற்பகுப்பு

இல்லாததால் அஃறிணைப்
படர்க்
கைவினை
தமிழிலக்கணப்படி
தெரிநிலைவினை
யின்பாற்படும்.

4.

வியங்கோள்வினை:—இவ்வகையானது 'வாழ்க'
என்
னும் சொல்லிற்போல
முக்காலத்திற்கும்
திணைபால்

இடங் கட்கும்
பொதுவாய் யிருப்பதால்
குறிப்புவினை எனப்
படும்.

வியங்கோள்

வினையை, முன்னிலை

வினையுடனும் இரு
வகை ஒழிபுகளான
எச்சங்களுடனும்
சேர்த்துச் சூத்திரம்

இயற்றப்பட்டிருப்பது பிற்காலத்ததா யிருக்கவேண்டும். காலம் தெளிவாய்க் காட்டும் முன்னிலைவினை, எச்சங்கள்

ஆகிய வகைக ளைக்காலம் தெளிவாய்க்காட்டாத வியங்கோ ளுடன், அவை விரவுத்திணைக்குரிய என்ற காரணம்பற்றி, ஓரின மாக்குதல் பொருத்தமன்று.

5. தெரிநிலை

வினை:—இதன்கண்

உயர்திணைப் படர்க்

கை ஆண்பால்,

பெண்பால்,

ஒன்றன்பால்களுக்குரிய

வினை

களும் அஃறிணைப் படர்க்கைப் பன்மைப்பால் வினையும் அடங்கும்.

நன்னூலாரும் தம்முடைய நூலில் வினையியலில் தன்

மை முன்னிலை

வினைகளிலிருந்து இவ்வகை

வினைகளைப் பிரித்

துக் கூறியிருப்பது

கவனிக்கத்தக்கது. ஆனால்

உயர்திணைப்

படர்க்கைப் பன்மைப்பாலே இவற்றினின்றும் பிரித்துத் தன்மை முன்னிலைகளுடன் அவர் சேர்த்துக் கூறுதது முறைதவறு.

## பெயர்ப்பயனிலை

பிற்காலத்தில் சொல்லிலக்கணத்திற் குரிய 'வினை' என்னும் முதனிலைக் கூறும் தொடரிலக்கணத்திற்குரிய 'பயனிலை' என்னும் பொருட் கூறும் மயங்கப்பட்டன. சொல்லதிகாரம் எச்சவியலில் 'இறப்பினெதிர்வினிகழ்வின்' என்ற முற்றியன் மொழிக்குரிய சூத்திரம் பிற்காலத்திற் சேர்க்கப்பட்டதாகத் தெரிகிறது. இச்சூத்திரத்தில் காலம் காட்டாப் பெயர்ப் பயனிலைக்குக் குறிப்பு வினை எனினும் குறி கொடுக்கப்பட்டிருக்கிறது.

? இச்சூத்திரத்தை அனுசரித்து வினையியலின் முதற் சூத்திரமும் 'அதுச் சொல்' "அன்மை யின்மை" என்ற சூத்

திரங்களும் பிற்காலத்தில் இயற்றப்பட்டன. இவ்வாறு புதுச் சூத்திரங்கள் இயற்றப்பட்டுக் 'குறிப்பு' என்பதன் கருத்து மாற்றப்பட்டதால் வினையியல் 4-வது சூத்திரத்திலும் பெயரியல் 3-வது சூத்திரத்திலும் 'குறிப்பு' என்பதன் கருத்து மறைந்தது. ஆனதால் இவ்விரண்டு சூத்திரங்களுக்கும் உரையாசிரியர்கள் முரணுகப் பொருள் கூறுகிறார்கள். 'அதுச் சொல்' என்ற சூத்திரத்திலுள்ள குறிப்பு வினை புதிதாக ஏற்படுத்தப்பட்டது என்பதற்குக் காரணம் வேற்றுமையியலிலுள்ள பெயர்ப்பயனிலைச் (=எழுவாய்க்குப் பயனிலை) சூத்திரத்தில் குறிப்பு வினை என்ற 'குறி' காணப்படாமையே. அச்சூத்திரம் வருமாறு.

"பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை யுரைத்தல் வினுவிற் கேற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதல்
அன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலையே."

பண்புகொள வருதல், பெயர்கொள வருதல் என்பன 'அதுச் சொல்' என்னும் சூத்திரத்திற் சுட்டப்பட்ட காலங் காட்டாப் பயனிலைகளைக் குறிப்பன ; இவை குறிப்பு வினை எனக் கூறப்படாமை கவனிக்கத்தக்கது. 'அதுச்சொல்' "அன்மை யின்மை" என்ற வினையியற் சூத்திரங்களை மன தில் வைத்துக்கொண்டு சேனாவரையர் இப்பெயர்ப் பயனிலைச் சூத்திரத்திற்குத் தவறுதலாக உரை கூறுகின்றனர். வினையிய யில் நாலாவது சூத்திரத்தில் சொல்லப்பட்ட குறிப்புப் பொருண்மை வினையும் தெரி நிலைப் பொருண்மை வினையும் இங்கேயுள்ள 'பொருண்மை சுட்டல்' என்பதன்கண் அடங் கும். இங்கேயுள்ள 'வினை நிலை யுரைத்தல்' என்பது பய னிலையாய் வரும் வினை யெச்சம் பெயரெச்சம் என்பவற் றைக்குறிக்கும். 'நீ வாங்கி வந்தாய், நீ வாங்கிய சுவடி' என்

4




பன பயனிலையாய்வரும்

எச்சங்களுக்கு உதாரணங்கள். தன்மை முன்னிலை படர்க்கைக்குரிய செஞ்சொல் வினைகள் யாவும் பொருண்மை சுட்டல் என்பதன்கண் அடங்கும். 'ஆ உண்டு' என்பது 'பண்புகொள வருதல்' என்பதன்கண் அடங்கும். 'அன்மை' பண்புச் சொல்லன்று என்றும் குறிப்புச்சொல் என்றும் சேனாவரையர் கூறுவது இலக்கண நூற்கு

வேண்டாத விகற்பம். இலக்கணம் சொல்லைப்பற்றிய கருவி நூலே; தத்துவசாஸ்திரமன்று.

மேற்காட்டியபடி உரையாசிரியர்களும் பிந்தின ஆசிரியர்களும் 'குறிப்பு' என்பதன் கருத்தை மாற்றியதால் பெயரியலிலுள்ள "தெரிபு வேறு நிலையல்" என்ற சூத்திரத்தின் உரையில் சேனவரையர் "தெங்கு" என்பது ஆகு பெயராய்ச் சினையாகிய காயை உணர்த்தும்போது குறிப்புச் சொல் எனப்படும். என்று பிழைபடக் கூறுகிறார். ஆகு பெயர்ச்சொல்லானது தனக்கு உள்ள ஆதிக் கருத்திலும் மாறுபட்ட கருத்திலும் ஆக இருவகையிலும் 'தெரிநிலைச் சொல்' எனவேபடும். இவ்வுண்மையைப் பின்பற்றி நன்னூலார் 'ஆகுபெயரைக் குறிப்புச்சொல்' லெனல் தவறின முறையாகும்.

'அதுச்சொல்' என்ற சூத்திரத்திலுள்ள காலம் காட்

டாக் குறிப்புப்

பயனிலையையும் 'வினை'

யென்னும் குறிப்பின்

க்ண் அடக்க வினையியல்

முதற் சூத்திரம்
பிற்காலத்தில் ஏற்
 பட்டது.
இச்சூத்திரத்தில்
'வினையெச்சமும்
பெயரெச்ச
 மும் வினை
எனப்படுகின்றன'
என்று சேனாவரையர்
கூறுவது
 அசம்பாவிதம்.
வினையியலில்

வினையெச்சத்தையும்
பெய . ரெச்சத்தையும்
பற்றிய இலக்கணம்
முதலாவதாகக் கூறப்

படுவது "முன்னிலை வியங்கோள்" என்ற சூத்திரத்தில்; இப்
பிந்திய சூத்திரத்தில் இவை தெரிநிலை ·வினையினின்றும்

பிரித்து இருதிணைப்
பொதுவினை
எனப்படுகின்றன.

பெயரியல் முதற் சூத்திரம் :—'எல்லாச் சொல்லும்
பொருள் குறித்தனவே' என்னும் சூத்திரத்தின் கருத்து.
இளவியாக்கம், முதற் சூத்திரத்தில் பெயர், வினையாகிய செஞ்
சொற்கள் மட்டும் திணைப்பொருள் குறிப்பதால் சொல் எனப்
பட்டன. செஞ்சொல் தவிர மற்ற வேற்றுமை, ஒழிபு, அசை
நிலையாகிய எவ்வகைச் சொல்லும் தத்தமக்கு உரிய பல்வேறு
கருத்துக்களைக் குறிக்கும். எழுத்துக்களில் சிலமட்டும் சொல்
லாய்ப் பொருள் குறிக்கும். மற்றவை ஒலிமட்டும் குறிக்கும்.
சொற்களிலோ எல்லாச் சொல்லும் ஒலி குறிப்பதோடு
பொருளையும் குறிக்கும்.

அல்லது வடமொழியில் வினைத் தாதுவினின்று எச்
சொல்லும் பிறக்கும் என்பதற்கு விலக்காக, வினைச்சொல்
பண்புச்சொல் உள்பட எவ்வகைச் சொல்லும் திணைப்
பொருளினிடமாகப் பிறக்கும் என்ற கொள்கை இச் சூத்தி
ரத்தில் சுட்டப்படுகிறது என்னலாம்.

## தொழின் முதனிலை.

தொடரின் உறுப்பாகிய இளவியானது முதனிலை எனப்
படும்; அம்முதனிலையின் மூலச் சொல்லானது பொருள்
எனப்படும்.

பொருள் என்பது சொல்லதிகாரத்தில் பல கருத்தில்
பிரயோகிக்கப் பட்டிருக்கிறது. இளவியாக்கம் 11-வது சூத்
திரத்தின் உரையில் சேனாவரையர் "ஈண்டுப் பெயரென்றது
பொருளை" என்பதில் பொருள் என்பது எழுவாய் என்ற
கருத்துத் தருகிறது.

வேற்றுமையியல் முதற் சூத்திரத்தின் உரையில் சேனா
... ... முதலாயினவற்றின் வேறு

வரையர் “செயப்படுபொருண மு[illegible] எழுவாயும் படுத்துப் பொருண் மாத்திரம் உணர்த்தலின் எழுவாயும் பொருள் என்பது வேற்றுமையாயிற்று” என்று கூறுவதில் பொருள் என்பது



எழுவாய்ப் பொருளைக் குறிக்கிறது. “எல்லாச் சொல்லு பொருள் குறித்தனவே” என்னுஞ் சூத்திரத்தில் பொரு என்பது கருத்தைக்

குறிக்கிறது.

"பெயர்நிலைக்

கிளவிகாலம் தோன்றா

தொழினிலை ஒட்டும்

ஒன்றலங் கடையே."

என்ற சூத்திரத்தின்

உரையில் சேனாவரையர்

"பெயர்,

பொருள், தொழினிலையும்

'அது (பொருள்)"

என்பதில்

பொருள் சொன்
மூலத்தைக் குறிக்கிறது.
இனி முதனிலை
எனப்படும் கிளவிக்குக்
காரணமான
இச்சொன்மூலம்
பெயர்ப்பொருள்,
தொழிற்பொருள் என
இருவகைப்படும்; இவ்வை
இங்கிலிஷில் Nominal
root,

Verbal root என

மொழிபெயர்க்கப்படும்.

மேல்

மேற்கோளாகக்

காட்டப்பட்ட

"பெயர் நிலைக்

கிளவி" என்ற சூத்திரம்

இவ்விருவகைப்

பொருள்களினின்

றும் பிறந்த முதனிலைக்

கிளவிகளின் தன்மைகளில்

ஒன்றை
உணர்த்துகிறது. பெயர்ப்
பொருளிற் பிறந்த பாலறி
கிளவி
யாகிய
எழுவாய்ப் பெயரும்,
பெயர்ப்பொருளிற் றோன்றி
அவாநிலையாய் வரும்
இருவகைத்
தொகைகளும் (Ad-
jective and adverb),

உருபேற்ற வேற்றுமைச்
சொல்

லும், பண்புச்
சொல்லும், எண்ணுச்
சொல்லும் காலம்

காட்டா.இவை
வேற்றுமையியலிலும்
உரியியலிலும் உணர்த்

தப்படுகின்றன.

தொழிற்
பொருளிற் பிறந்த

முதனிலைகளில் இரு
வகை உள; ஒன்று
காலம் காட்டும்;
அதன்பால்
அடங்குவன
வினைமுற்றும்
வினையெச்சமும்
பெயரெச்ச
மும்; இன்னொருவகை
பெயர்ச்சொல்லாய் வரும்;
இப்

பெயரினும் இருகூறு
உள; ஒரு கூறு காலம்
காட்டும் வினை

யாலணையும் பெயர்; மற்றக் கூற்றில் உண்டல் என்பது போன்ற தொழிற் பெயரும், வீரசோழியம் தாதுப்படலம் 2,3-வது பாடல்களில் வரும் 'காரகம்' என்ற குறியில் வரும் எழுவாய்ப் பெயர்களும் அடங்குவன. "தொழினிலை யொட்டும் ஒன்றலங்கடையே" என்பதில் இவ்விருவகைப் பெயர்கள் கூறப்படுகின்றன. 'ஒட்டு' என்பது இங்கே தோன்றிய முதனிலை (Derivative word) எனப் பொருள்படும்; * இதன் பொருள் "தொழிற் பொருளிற்பிறந்த பெயர்க்கிளவிகளினும் (காலம் காட்டும்) ஒரு கூறல்லாத விடத்து வேறு கூறு பெயர்நிலைக் கிளவி போன்று காலம் காட்டா" என்பது

இனி வேற்றுமை மயங்கியலிலுள்ள 28-வது சூத்திரம் 'தொழின் முதனிலை' என்ற குறியீட்டுக் குரித்தான சொற்களின் தன்மையைப் பற்றிக் கூறுகிறது. இச்சூத்திரம் வருமாறு:—

"வினையே செய்வது செயப்படு பொருளே

நிலனே காலம் கருவி என்று
இன்னதற்கு இதுபயனாக என்னும்
அன்ன மாபின் இரண் டொடுந் தொகைஇ
ஆயெட் டென்ப தொழின் முதனிலையே?''

சொல்லுற்பத்திக் குரிய வடமொழி யிலக்கண விதியைப் பின்பற்றி இயற்றப்பட்ட இச் சூத்திரத்தின் நோக்கம் பிற்காலத்துள்ள உரையாசிரியர்களால் மறைக்கப்பட்டோ அல்லது மறந்து விடப்பட்டோ போனதாகத் தெரிகிறது.

* ஒட்டு என்பதில் வினைச் சொல்லும் அடங்குமேனும், அதிகாரம் பெயர்ச் சொல்லைப்பற்றி எழுந்ததால் இங்கே 'ஒட்டு' என்பது தொழிற் பொருளிற் பிறந்த பெயர் வகையையே சுட்டும்.

# 54
# தொல்காப்பியம்

தொழின் முதனிலை என்பதன் ஆதிக்கருத்து விளக்கப்படாமல் உரையாசிரியர்கள் தொழில் முதனிலை என்பது வேற்றுமைக்குரிய காரகம் எனக் கருதினர்கள். சூத்திரமும் ஆதியில் அமைந்தபடியில்லாமல் சிதைந்தும் சிதைக்கப்பட்டும் போனதாகத் தெரிகிறது.

இச்சூத்திரத்தின் முதலிரண்டு அடிகள் மாற்றப்படாமல் இருக்கின்றன. பின் மூன்றடிகள் புதிதாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இம் மூன்றடிகளுக்குப் பதிலாக ஆதியில் "அவ்வாறென்ப தொழின் முதனிலையே" என்ற அடி இருந்திருக்க வேண்டும். இவ்வாறு இச்சூத்திரம் மாற்றப்பட்டதன் வரலாற்றை ஆராய்வோம்.

கிளவியாக்கம் என்பதன் ஆதிப் பொருளானது "கிளவி அல்லது தனிமொழியானது காரணச் சொல்லாகிய பொருள் மேல் ஆமாறு" எனப்படும். வேற்றுமை மயங்கியலிலுள்ள * இச்சூத்திரமும் ஆகுபெயரைப்பற்றிய சூத்திரங்களும் 'கிளவியாக்கம்' என்ற தலைப்புப் பெயருடைய இயலில் வைக்கத்தகுந்தன. 'கிளவியாக்கம்' என்பது தொடராக்கம் என்னும் கருத்தையும் உடைத்து எனக்கொண்டு செப்பு, வினா ஆகிய இருவகைத் தொடர்க்குரிய சூத்திரங்கள் கிளவியாக்கவியலில் சேர்க்கப்படுமுன் தொழின் முதனிலைச் சூத்திரமும் ஆகுபெயர்ச் சூத்திரங்களும் கிளவியாக்கவியலில் அமைந்திருக்கவேண்டும்.

* கிளவியாக்கம் என்பதில் திணைபாற் பொருள் விகுதி சேர்ந்து ஆகும் கிளவியும் (Inflexion) வாய்ப்பாட்டு விகுதி சேர்ந்துஆகும் கிளவியும் (Formation or derivation of words) சுட்டப்படுகின்றன. இச் சூத்திரத்தில் விகுதி பெற்று வரும் தொழின் முதனிலைச் சொல்லே ஆராயப்படுகிறது.



தொழின் முதனிலை என்பது தொழினிலைப் பொருண் மேல் (Verbal

root) ஈறுபெற்று வரும்சொல்; ஆகுபெயர் என்பது தொழிற்பொருள் அல்லது பெயர்மேல் ஈறு பெறாது வருஞ்சொல். வட மொழியில் இவ்வகையான ஆகு பெயர் கிடையாது; வடமொழியில் ஈறு பெறாது சொல் தன் கருத்தை மாற்றினாலும்

ஈறு தோன்றி மறைந்ததாகக் கொள்வர்.

தொழின் முதனிலை:—வட மொழியில் நான்குவகையில் ஆக்கப்பட்ட சொற்கள் காணப்படுகின்றன. அவை கிரியா பதம், (Verb) கிருதாந்தபதம் (Nouns primarily derived from verbs), தத்திதாந்தபதம் (Nouns derived from other nouns),

வேற்றுமைப்பதம் (Words de- clined for case and number).

தொழிற் பொருளினின்று (verbal root) ஆக்கப் பட்ட வினைச் சொற்கள் கிரியாபதம் எனப்படும்; அதனி னின்று ஆக்கப்பட்ட பெயர்ச் சொற்கள் கிருதாந்தம் எனப் படும், பெயர்ச்

சொற்களினின்று பற்பல
கருத்துக்களைக் குறிக்கத்
தோற்றுவிக்கப்படும் பெயர்ச்
சொற்கள் தத்திதாந் தம்
எனப்படும்;
வேற்றுமைப்பதம் விபக்தி
பதம் எனப் படும்.

தமிழ் இலக்கண
ஆசிரியர்களும் தமிழ்ச்

சொற்கள் மூலச்
சொற்களினின்றும் ஆகும்
முறைக்கு வடமொழியிற்
போல இலக்கண விதிகள்
கற்பித்தார்கள்.
அம்முறைபற்றி இத்
தொழின் முதனிலைக்குரிய
சூத்திரமும் எழுந்தது.

வட மொழியில் தாது என்ற தொழிற் பொருளினின்று கிரியாபதமும், கிருதாந்தப் பெயரும் பிறந்தனவாகக் கருதப்படுவது போல்,
தமிழிலும் வினைமுற்று,

வினையெச்

56.

தொல்காப்பியம்

சம், பெயரெச்சம்

ஆகிய மூவினைகளும்,

ஊண்போன்ற

தொழிற் பெயர் (Verbal

Noun) முதலிய சில

பெயர்ச்

சொற்களும் தமிழினுள்ள
தொழிற் பொருள்
அல்லது
*பொருட்போலியினின்று தோன்றினவாகக்
கருதப்பட்டன.
"வினையே செய்வது"
என்ற இச்சூத்திரத்தின்
உரையில்
இளம்பூரணர்
"இவ்வெட்டோடும்
தோன்ற நிற்கும் வினைச்

சொல் என்றவர்று"
என்பது நோக்கத்தக்கது;
இங்கே தோன்ற நிற்கும்
என்னும் சொற்
பிரயோகம் தொழின் முத
னிலைச் சொற்கள் தொழிற்
பொருளினின்று
தோன்றிய என் னும்
கொள்கை ஆதியில்
நிலவியிருந்தது என்பதைக்
குறிக் கிறது. தோன்ற

என்பது பிறக்க என்னும் பொருட்டு, இச் சொற் பிரயோகம் முற்காலத்தில் இச்சூத்திரத்தின் உண்மைக் கருத்து உணரப்பட்டு வந்த நிலையைச் சுட்டு கிறது. இச்சொல்லிடையிட்டு வழங்கப்பெற்ற மேற்கண்ட

இளம்பூரணர் வசனம்
பிற்காலத்தில்
உரைக்கப்பட்ட பிழை
யுரையுடன் கலந்து
கிடக்கிறது.
இனி
இச்சூத்திரத்தின்
முதலிரண்டு அடிகளின்
பிரகா
ரம் தமிழில் தொழிற்
பொருளாகிய சொல்

மூலத்தினின்று தோன்றிய சொற்கள் அறுவகையாகப் பிரிக்கப்பட்டிருந்தன என்று தெரிகிறது.

அவை வருமாறு :

1. வினை (2) செய்வது அல்லது கருத்தா (3) செயப்படுபொருள் (4) நிலன் (5) காலம் (6) கருவி.

1. இவற்றுள்

முதலாவது பிரிவான

'வினை' என்பதன்

கண் வினையியலில் 4, 5,

6, 8, 9 முதலிய

சூத்திரங்களில்

---

* இக்குறியீடு வீர சோழியம் தாதுப்படலத்தில் 1-ம் வின் உரையில் காணப்படுகிறது.

சுட்டப்பட்ட
செஞ்சொல் வினைகளின்
இருபிரிவுகளாகிய தெரிநிலை
வேறு நிலையல் வினை,
குறிப்பு வினைகள்,
வியங்கோள் வினை, 7, 10,
25 ஆகிய சூத்திரங்களில்
சுட்டப்பட்ட எச்ச
வினைகள் ஆகிய வகைகள்
அடங்குகின்றன.

இவை .கிரியா பதங்கள்.
இன்னும் 'வினை' என்பதில்
உண்டல், போன்ற
தொழிற் பெயரும்
அடங்கும்.

இவ்வாறு
வினைச்சொற்களின்
இலக்கணம் பெயரிய
லோடியையுடையதாகக்
கருதப்படும் வேற்றுமை
மயங் கியலில்

உரைக்கப்பட்டது
அசம்பாவிதம் என
உட் கொண்டு
நச்சினார்க்கினியர் உரையில்
இச்சூத்திரம் "வினை
யியலில் உணர்த்தப்பட
வேண்டாவோ" என்ற
வினா எழுப் பப்பட்டுப்
போலி விடையும்
இறுக்கப்படுகிறது.

2. இரண்டாவது பிரிவான 'செய்வது' என்பதன்கண் எழுவாய்ப் பெயரில் வரும் வினையாலணையும் பெயர்களும், வீரசோழியம் தாதுப்படலம் 2, 3-வது பாடல்களில் சுட்டப்பட்ட *காரகப் பெயர்களும் அடங்கும். மேற்படி வீர

சோழியப் பாடல்களின்
உரையில் காட்டப்பட்ட 'போவான்,
பூச்சு, நாற்று, ஆட்டம்,
நாட்டம், கற்பு, சிரிப்பு,
அறிக்கை, காணி, அறிவு,
கரவு, காட்சி, விதை,
அவிழ், மடி, விளக்கு, உ
சாவு' முதலிய சொற்களும்,
சிவஞான சுவாமிகளின்
முதற் சூத்திர
விருத்தியுரையில்

வினைமுதற் பொருண்மை யுணர்த்துஞ் சொல்லுக்கு சுவாமிகளால் உதாரணமாகக் காட்டப் பட்ட 'திரை, நரை, அலை, தளிர், பூ, காய், கனி, கெடு, கேடு, கொல்லி, ஓதி' முதலிய சொற்களும் 'செய்வது' என்னும் வாய்பாட்டைச் சேர்ந்தன.

* இக்காரகம் வேற்றுமைக் காரகம் அன்று; பெயர்க்குரிய விகுதிபெற்று தொழிற் பொருளினின்று தோன்றியது.

3. மூன்றுவது பிரிவாகிய செயப்படுபொருள். இவ் வகை ஐ விகுதி பெற்ற வேற்றுமைச் சொல்லன்று. இச் சூத்திரத்திற் சொல்லப்பட்ட வகைகள் உடை

மைப் பொருட்குரிய 6-ம் வேற்றுமைச் சொல்லும் விளிப் பெயரும் நீங்கலாக வடமொழியில் அறுவகை விபக்திகள் எனப்படும் வேற்றுமைக் காரகங்களைச் சுட்டுவனவாக, உரையாசிரியர்கள் மயங்கி இச்சூத்திரத்திற்கு உரை

எழுதியிருக்கிறார்கள்.

பிழைபட்ட

இவ்வுணர்ச்சியினிமித்தம்

இச் சூத்திரத்திலுள்ள

தொழின் முதனிலை

என்பதில் தொழில்

என்பதற்குச்

சொற்றொடரை முடிக்கும்

வினைமுற்று என்

றும் 'முதனிலை' என்பதற்கு அவர்நிலை அல்லது வேற்றுமை விபக்தி என்றும் கருத்துக்கொண்டார்கள். வேற்றுமை

விபக்தியை வேற்றுமைக்

காரகம் எனக்கொண்டு தமிழி லுள்ள 'முதனிலை' என்பது காரகம் என்பதன் மொழி பெயர்ப்பு என்று பிறழ உணர்த்தினர்கள். வீரசோழியம் தாதுப் படலத்தில் 3, 4-வது பாடல்களிற் கூறப்பட்ட காரக பதங்களே (Nominative forms

of nouns)

இச் சூத்திரத்திற்
கூறப்பட்டன என்பது
உரையாசிரியர்
களால்
மறந்துவிடப்பட்டது
போலும்; அல்லது இச்
சூத்திரம் அவிநயனார்
கருத்தைப்
பின்பற்றியதால்* அவர்
கருத்துக்கு

மதிப்புக்கொடுக்க
மனமில்லாத
தொல்காப்பிய
வழியினராகிய
உரையாசிரியர்கள்
வேண்டுமென்று திரித்தும்
உரைத்திருக்கலாம்; யாது
காரணம் என இக்காலத்தில்
நமக்
குப் புலப்படவில்லை.

---

* வீரசோழியம்

சொல்லதிகார முடிவில் காட்டப்பட்ட இரண் டாவது வெண்பாவின் உரையில் "தொழிற்பெயர்" என்பதன் இலக்கணம் அவிநயனார் உணர்த்தினார் எனக் கூறப்படுகிறது.

சொல்லதிகார விளக்கம் 

இச்சூத்திரம்
அவிநயனார்
கருத்தைக்கொண்டது
என
நோக்காது சேனாவரையர்
"வேற்றுமைப்
பதங்களாகிய கார
கங்கள்
வேற்றுமையியலில்
முறையாய்ச்

சொல்லப்பட்டிருப்
பமையால் இச்சூத்திரம்
வேண்டா என்றும்,
இச்சூத்திரம்
வினையியலில்
அமைத்தற்குரியது
என்றும், வினையியலினுள்
ளதும் 'நிலனும்
பொருளும்' என்று
தொடங்குவதுமான
பெயரெச்ச

முடிபுப்பொருட்
சூத்திரத்திற்கும்,
'செயப்படு
பொருளை' என்ற
கருமகருத்தன்
சூத்திரத்திற்கும் தோற்று

வாய்" என்றும் பற்பலவாகக் கூறுகிறார். இவ்வினையியற்சூத்
திரங்களில் வரும் பொருட் பெயர் யாவும் எழுவாய்ப்
பொருளாய் மாத்திரமேயாய் இருப்பதையும் தம்முடைய
உரையின்படி இவ்வேற்றுமை மயங்கியற் சூத்திரத்திலுள்ள

பெயர்கள் பலவகை
வேற்றுமைப் பொருளாய்

இருப்பதை.

யும் அவர் நோக்கிற்றிலர்.

வினையியலில்

'செய்யும்' என்னும்

எதிர்காலப் பெயரெச்

சத்திற்குரியதும் 'அவற்றொடு வருவழி'' என்று தொடங்கு வதுமான சூத்திரத்தின் உரையில் வினைமுற்றானது அவாய் நிலைப் பொருளில் வராது எனச் சேனாவரையர் கூறுகிறார். அக்கருத்தை அநுசரித்து 'வினையே செய்வது'' என்ற இச் சூத்திரத்தில் வினை என்பது மேலே நாம் கூறியதுபோற் பொருள்படும்என்று கூறுவதைஒழித்து அவாய் நிலைச்சொல் லைக் குறிப்பதாகக்கொண்டு அதற்கு அநுசாரணையாகக்

'கொளலோ கொண்டான்'

என்று உதாரணமும்*

கொடுத்

* சேனாவரையர் இச்சூத்திரத்தின் உரையில் 'வினைதலைச் செய்தான்'' என்று கூறுவதில் 'வினைதல்' என்ற தொழிற்பெயர்க் குச் செயப்படு பொருள் உருபு கொடுத்துக் கூறுதல் கவனிக்க.



தார்; இங்கே கொளல் என்பது செயப்படு பொருட் கருத் தில் வருவதால் செயப்படு

பொருட்கு உதாரணமாகின்றதே ஒழிய, சூத்திரத்தில் செயப்படுபொருளினின்று, பிரித்துக் கிளக்கப்பட்ட 'வினை'க்கு உதாரணமாகவில்லை என்பதையும் சேனாவரையர் முதலியோர் கவனிக்காததுவியக்கத்தக்

கது.

இனி இச்சூத்திரத்தின் மூன்றாவது பிரிவாகிய செயப் படு பொருட்கு உதாரணமாகச் சிவஞான சுவாமிகள் முதற் சூத்திர விருத்தியில் இவ்வகைக்கு எடுத்துக் காட்டாகக் கூறும் ஊண், தீன், கோள், உடுக்கை

(= உடை) என்ற கிளவிகளையும் வீரசோழியம் தாதுப்படலம் 3-ம் பாடலின் உரையில் ஓதப்பட்ட தறி, முறி, பொதி, என்ற கிளவிகளை யும் நாம் எடுத்துக்கூறலாம். இக்கிளவிகளெல்லாம் வேற்

றுமை யுருபு ஏலாமல்
எழுவாய் வடிவத்தில்
இருத்தல்
நோக்கத்தக்கது.
இச்சூத்திரத்தில் வரும்
சொற்கள் வெறும்
எழுவாய் வடிவத்தில்
அமைந்திருத்தல்
போதாது. அவை
கள் தொழிற் பொருளிற்
றோன்றியவை யாயும்

எழுவாய் வடிவத்தில் அமைபவையாயும் இருக்கவேண்டும். ஆதலின் இச்சூத்திரத்தோடு தொடர்புடையதாகக் கருதப்பட்டதும் வினையியலிலுள்ளதுமான "நிலனும் பொருளும்" என்ற பெயரெச்சச்

சூத்திரத்தின் உரையில் உதாரணமாக எடுத்தோதப்பட்ட இல், நூல், காலம், கோல், சோறு, நாள் கூலி, என்ற கிளவிகள் தொழிற் பொருளினின்று பிறவாத இயற்சொற்களானபடியால் இச்சூத்திரத்தில் குறிப்பிக்கப்

பட்ட கிளவிகளுக்கு உதாரணமாகா. ஆதலின் இச்சூத்திரத்திற்கும் "நிலனும் பொருளும்" என்ற சூத்திரத்திற்கும் தொடர்பு கற்பித்ததும் நியாயமன்று.

4.

நிலன்:—இந்நாலாவது பிரிவுக்கு வீரசோழியம் 3-வது பாடலின் உரையில் உதாரணமாகக் கூறப்பட்ட 'சுடலை' என்பது எடுத்துக்காட்டாகிறது.

5. காலம்:—'அறப்பு

என்பது அறுப்புக்காலம் எனக் கருத்துத் தரும்போது இவ்வகைக்கு உதாரணமாகிறது.

6. கருவி:—வீர சோழியம் தாதுப்படலம் 3-ம் பாடலின் உரையில் கூறப்பட்ட அணி, மொழி, உடை, கழி என்னும் கிளவிகளும் மண்வெட்டி, படை, என்பனவும் இவ்

வகைக்கு உதாரணமாகலாம். இச்சூத்திரத்தின் 4-வது அடி பின் காட்டப்படும் வேறு காரண நிமித்தம் இடைச்சேர்க்கப்பட்டபடியால் இதன்கண்ணுள்ள 'இன்னதற்கு' 'இது பயன்' என்னும் இரு வகையும் நான் கூறிய உரைக்குப் பொருத்தமல்ல. மேலும்

தொழில் முதனிலை என்பது தொழிற் பொருளிற் பிறந்த சொல்லைக் குறிக்கும் என்ற கட்சியில் இவ்விருவகைக்கு உதாரணம் காணல் அரிது.

இச் சூத்திரத்தின் பின் மூன்றடிகள் முன்வேறாயிருந்த மூன்றாவது அடிக்குப்

பதிலாகச் சேர்க்கப்பட்டமைக்குக் காரணம் வருமாறு:

.

இச் சூத்திரம் பெயர்ச் சொல்லையும் வினைச்சொல்லையும் பற்றிக் கூறுவதால் கிளவியாக்கவியலில் அமைக்கப் பட்டிருக்கவேண்டும். 'கிளவியாக்கம்'

என்பதற்குத் 'தொடா ரக்கம்' எனக் கருத்துத் தந்து செப்பு, வினா ஆகிய விஷயங்

களுக்குரிய சூத்திரங்களைக்கிளவியாக்கவியலிற்சேர்த்தவுடன், தனிமொழிக்குரிய இச் சூத்திரம் கிளவியாக்க வியலிலிருந்து தனி மொழியைப் பற்றிக் கூறுவதாகக் கருதப்பட்ட வேற்



றுமையியலில் சேர்க்கப்பட உத்தேசிக்கப்பட்டது. இச் சூத்திரத்திற் கூறப்பட்டவை, பெரும்பாலும் பெயர்களான

படியாலும் அவை வேற்றுமை யுருபு ஏலாதவையானபடியாலும் இச் சூத்திரத்தை வினையியலிலாவது வேற்றுமையியலிலாவது சேர்ப்பது நியாயமன்று எனக் கருதப்பட்டது. தொழில் முதனிலையின்று தோன்றி ஒருவாறு பொருளினும் (root) வேறான வடிவம் இச்சொற்கள் அடைந்த படியால் வழுவமைதியோடியைபுடைய வேற்றுமை மயங்கியலில் இச் சூத்திரத்தை அமைத்தல் தகுதி எனக் கருதப் பட்டதாகத் தெரிகிறது.

விபக்தி வேற்றுமையைப்பற்றிப் பெரும் பான்மைகூறும் இவ்வியலில் இச்சூத்திரம் அமைக்கப்பட்டதால் வடமொழியில் கேட்கப்படும் அறுவகைக் காரக விபக்தியைப்பற்றி உணர்த்த இச்சூத்திரம் எழுந்தது என உரையாசிரியர்கள் கருதினர். *

ஒவ்வொரு வினையும் அறுவகைக் காரகங்களை ஏற்கும் என்று விதி செய்ததில் இவ்விதியானது செயப்படுபொருள் குன்றுவினையாகிய சகர்ம வினைக்கு மட்டும் பொருந்துவதை யும் செயப்படுபொருள் குன்றிய வினையாகிய அகர்மவினைக்கு இவ்விதி பொருந்தாமையும் உணர்ந்தார்கள். ஏனெனில் தொழிற்பெயர்க் கர்மம், கருத்தா, செயப்படுபொருட் கர் மம், நிலம், காலம், கருவி என்ற ஆறு காரகங்களில் அகர்ம வினையானது "ராமன் நேற்று நிலத்தில் காலால் நடக்

---

* முதலிரண்டு அடிகளிலுள்ள காரகங்களில் ஏதவும், கோளியும் இல்லாததால் அவ்வாறு ஆசிரியர்கள் கொண்டது தவறு.

தான்'' என்பதிற்போல நாலு காரகங்களே பெறுவதையும் தொழிற் பெயர்க்கர்மம், செயப்படு பொருட் கர்மம் ஆகிய இருவகைகளையும் பெறமுடியாமையையும் பார்க்கிறோம். குறைந்த காரகங்கள் பெற்றுவரும் அகர்ம வினைகளும் உண்டு என்பதைக்காட்ட "வினையே செய்வது" என்ற சூத்திரத்திற்குப்புறனடையாக அதைஅடுத்து "அவை தாம் வழங்கியன் மருங்கிற் குன்றுவகுன்றும்'' என்ற சூத்திரம் பிற்காலத்தில் எழுந்தது *இங்கே வழங்கியன் மருங்கு என்பதன் கருத்து ஆடுதல், வழங்குதல் (செல்தல்) போன்ற அகர்ம வினை; உலகவழக்கம் அன்று. சேனுவரையர் உரையில் 'வழங்குதல்' என்றமூலச் சூத்திரச் சொல்லையே 'செல்தல்' என அகர்மவினையிற் பொருள்படும்படி, ஆடுதல் என்பதனேடு சேர்த்து "ஆடுதலும் வழங்கலுமாகிய தொழில்'' எனக் கூறப்படுவது கவனிக்கத்தக்கது.

சகர்மவினைக்குக்

காரகவிபக்தி ஆறும்

வரும். அகர்ம

வினைக்கு அவ்வெண்ணிற் குறைந்தேவரும் என்பது இவ்விரு சூத்திரங்களின் கருத்து. 'பாலின் பொருட்டு ஆவினிடம் சென்றான்' என அகர்மவினையோடு இன்னதற்கு இதுபய ஞக என்னும் இரண்டு விபக்திகளும் வருவதை ஆசிரியர்கள் கண்டார்கள். அதன்பின் அகர்ம வினைக்கும் ஆறு விபக்திக ளும் அவாநிலையாய் வருகின்றன என்பதை உணர்த்தும் பொருட்டு "வினையே செய்வது" என்ற சூத்திரத்தில் பிந் தின மூன்றடிகள் சேர்க்கப்பட்டன. அகர்மவினைக்கும் உரிய அவாய் நிலைகளை நோக்கி இவ்வாறு சூத்திரம் மாற்றப்பட்ட

---

* வினையே செய்வது" என்ற சூத்திரத்தில் தொழின் முத னிலை என்பது விபரீதமாக உணரப்பட்டபின் இச்சூத்திரம் ஏற்பட வேண்டிய அவசியம் புலனுவது வெளிப்படை.

தால் விபக்திகள்
எட்டாயின.
பயன் என்னும் விபக்தி செயப்
படு
பொருளுக்கு வேறாக
இல்லாவிட்டாலும் *
வேற்றுமை
மயங்கியலானபடியால்
அகர்மவினைக்குரிமையாய்
மயக்க
முடைய

பயன் விபக்தியும் சேர்க்கப்படலாம் என ஆசிரியர்கள் நினைத்தார்கள் போலும். இம் மூன்று பின்னடிகள் ஆதியில் ஏற்பட்டனவல்ல என்பது 'வினையே செய்வது' என்ற சூத்திரத்தின் உரையில்

சேனாவரையர்
விபக்திகளின் எண்ணும்
விவரமும் கூறும்
பாகத்தைக் கவனித்தால்
தெரியும்.
"இரண்டாவதற்கோதிய
பொருளெல்லாவற்றையும்
செயப்படு பொருள்
எனத்
தொகுத்து ஏதுவைக்
கருவிக்கண்ணும் வினை

செய்யிடத்

தைக் காலத்தின்

கண்ணும் அடக்கி

எழாகச்செய்து அத

ளேடு ஆண்டுப்

பெறப்படாத வினை

யென்னும் முதனிலை

கூட்டி எட்டென்றாகலின்"

என்று உரையில்

சேனாவரை

யர்

கூறுகிறார். இவ்வாறு கூறுவதால் 'இன்னதற்கு' என்னும்

நாலாம்
வேற்றுமைப்பொருளும்
'பயன்' என்பதும் சேர்க்கா
மல் எட்டு எனக்
கணக்கிடுவது
கவனிக்கத்தக்கது; இந்த
இரண்டு விபக்திகளுக்குப்
பதிலாக ஏது என்பதும்
வினை
செய்யிடம் என்பதும்
சேர்த்து

எட்டு எனப்படுகிறது. இதி

லிருந்து இவ்வாறு உரை எழுதப்பட்ட காலத்தில் 'இன்ன தற்கு இது பயனாக' என்ற அடியானது சூத்திரத்தில் இல்லா மலிருக்க வேண்டும் என்று நியாயமிருக்கிறது.

மேலும் இவ்வுரையில் விளிதவிர வேற்றுமையிலிற்

சொல்லப்பட்ட ஏழு

விபக்திகளும் சேனாவரையர்

இங்கே

கூறும் வினை ஒழிந்த

ஏழு விபக்திகளும்

வெவ்வேறு பாகு

---

* பாலிபாஷையின்

அகராதியின்படி உபயோகம்

என்பது செயப்படு பொருளின் பரியாயம்; இதன் மொழி பெயர்ப்பு 'பயன்'.



பாட்டைச் சேர்ந்தன எனக் கூறுகிறுர். இது உண்மையே. வேற்றுமையியற் பாகுபாட்டில் 4-ம் வேற்றுமைப்பொருளும் 6-ம் வேற்றுமைப் பொருளும் சேர்ந்து ஏழு வேற்றுமை ஆகிறது. இச்சூத்திரத்தின் பாகுபாட்டில் சேனுவரையர் உரையின்படி அவ்விரண்டு வகையும் தவிர்த்து ஏழு ஆகிறது. இவ்வுரையிலிருந்து ஆதியில் இச்சூத்திரத்தில் 4-ம் வேற்றுமைக்குரிய 'இன்னதற்கு' என்பதும் 'பயன்' என்பதும் இருந்திருக்கமாட்டாது என்று தெரிகிறது.

'இன்னதற்கு' 'இது
பயன்' என இரண்டும்
ஆதியில்
இருந்திருக்குமாயின்
சேனாவரையர் உரையில்
வேற்றுமைப்
பொருள்கள் "வினை,
செய்வது,
செயப்படுபொருள், நிலம்,
காலம்,வினைசெய்யிடம்,
கருவி, ஏது, கோளி,

பயன்”
எனப் பத்து
வேற்றுமைகள் என்று
கண்டிருக்கவேண்டும்.
பாலி பாஷையில்
இரண்டாம் வேற்றுமையைச்
செயப்
படுபொருள் என்பதற்குப்
பதிலாக ‘உபயோகம்’
என்று
கூறினர்கள் எனத்

தெரிகிறது. 'உபயோகம்'
என்
பதன் மொழி
பெயர்ப்பான 'பயன்'
என்பது இச் சூத்திரத்
திற்
குறிப்பிட்டிருந்தாலும்
குறிப்பிட்டிருக்கலாம்; 7-ம்
வேற்றுமை ஒன்றையே
நிலம், காலம்,
வினைசெய்யிடம் என

மூன்றாக எண்ணிச் சேனாவரையர் எட்டுக்குக் கணக்குக் கொண்டு வருவதுபோல், இரண்டாம் வேற்றுமை ஒன்றையே செயப்படுபொருள், பயன், என இரண்டாகவும் எண்ணி

மூல ஆசிரியர் எட்டு என்பதற்குக் கணக்குக்கொண்டு வந்திருக்கலாம். ஆகவே மூலத்தில் 5, 6-ம் வேற்றுமைகளைச் சேர்க்காமல் வினை, காலம், (7-ம் வேற்றுமையின் இரட்டிப்பு), பயன் (2-ம் வேற். இரட்டிப்பு) எனும் மூன்றும் சேர்த்து எட்டு ஆகவும், சேனாவரையர் உரையில் 4-ம், 6-ம்

5

66

தொல்காப்பியம் வேற்றுமைகளைச் சேர்க்காமலும், பயன் என்பதையும் சேர்க்காமலும் வினை, காலம்,

வினைசெய்யிடம் என்பன
சேர்த்தும் எட்டு ஆகவும்,
இவ்விரு வேறு வகையில்
எண்ணப்படுதல் விபரீதமாக
இருக்கிறது.
 இவ்விபரீதத்திலிருந்து
“இன்ன தற்கு இது பயன்”
என்ற அடி,
சூத்திரத்தில் பின்னால் சேர்க்
கப்பட்டதெனத்
தீர்மானிக்கலாம்.

இன்னொரு
விசேஷம்
கவனிக்கத்தக்கது. அகர்ம
வினைக்கு ஆறு காரகம்
ஏற்படும் பொருட்டு
'இன்னதற்கு இது பயன்'
என்ற அடி
சேர்க்கப்பட்டதாக மேல்
கூறப்பட் டது.
'வழங்கியன் மருங்கில்'
என்ற சூத்திரத்தின் உரை

யில் சேனாவரையர்
இக்கருத்துக்கு மாறாக
"கொடி ஆடிற்று வளி
வழங்கிற்று என்புழி
செயப்படுபொருளும்
ஏற்ப தும் பயனுமாகிய
முதனிலை இல்லையாயினும்
ஒழிந்தனவற் றான் ஆடுதலும்
வழங்கலுமாகிய
தொழினிகழ்ந்தவாறு கண்டு
கொள்க" எனக்

கூறுகிறார்.

செயப்படுபொருள் அகர்ம

வினையால் எப்பொழுதும்

ஏற்கப்பட முடியாதது

உண்மை

யே; ஆனால் இன்னதற்கு

என்பதும் பயன் என்பதும்

சில

வேளை ஏற்கத்தக்கன.

அவற்றையும்

செயப்படுபொருள்

என்பதுடன். சேர்த்து
எண்ணியிருப்பதன்
நோக்கம் "வழங்
கியல் மருங்கு"
என்பதன் கருத்தை
'அகர்மவினை' எனக்
கொள்ளாமல் "உலக
வழக்கம்" எனக்கொள்ளும்
பொருட்டு
அமைந்திருப்பதாகத்
தெரிகிறது.

பின் வந்த

உரையாசிரியர்கள் முதனிலை

என்பதைக்

காரகவிபக்தி எனக்

கொண்டால்

வடமொழியிலுள்ள

ஆறுகாரகவிபக்திக்கு மேல்

எட்டு விபக்திகள் எனப்பொருள்

கொள்ள

வேண்டியிருக்கிறதென்றும்

அது அசம்பாவிதம்

என்றும் கருதி முதனிலை
என்பதை அவாய் நிலை
எனப்



பொருள் கொண்டார்கள்.
வினையியலிலுள்ள
'அதுச்சொல்'

என்ற சூத்திரத்தின் உரையில் முதனிலை என்பது அவாய் நிலை எனக் கருதும்படி நச்சினார்க்கினியர் கூறுவதால் இது விளங்கும். 'எவ்வகையிலும் 'வினை' என்பதற்கு வினைப்பெயர் எனப் பொருள் கொள்ளுங்கால் அறுவகை விபக்தியிலும் அடங்கவில்லை; அது

அவாய்நிலை எனலும்
கூடாது.

ஆதலால் 'காரகம்'
என்பதைக் காரணம்
எனப்பொ
ருள்கொண்டும் காரணம்
என்பதன்
மொழிபெயர்ப்பு முத
னிலை எனப் பிழைபடக்
கொண்டும் வினைக்குக்
காரணம்

எட்டு என மெய்ந்நூற்
பொருள் உணர்த்துவதற்கு
இச் சூத்
திரம் எழுந்தது என்றும்
சாதாரணச்
சொல்லிலக்கண விதி
கற்பிக்க இச்சூத்திரம்
வந்ததில்லை என்றும்
கருத்துப்பட
உரையாசிரியர்கள்
கூறினர்கள். இம் முறையை

அநுசரித்து
அகர்மவினை நோக்கி
எழுந்த அடுத்த
சூத்திரத்தில் 'வழங்
கியன் மருங்கு'
என்பதற்கு பாஷை நடைக்குரிய
உலக வழக்
கம் எனப்
பொருள்படும்படி நெகிழ்ந்து
கூறிவிட்டார்கள்.
"வினையே

செய்வது" என்ற

இச்சூத்திரம் "நிலனும்

பொருளும்" என்ற

வினையியற் சூத்திரத்திற்குத்

தோற்று

வாய் என்று

உரையாசிரியர்கள்

கூறுவதைக் கவனித்தால்

இச்சூத்திரம் ஆதியில்,

"வினையே செய்வது

செயப்படுபொருளே
நிலனே காலங்கருவி
யென்று
யா யாறென்ப
தொழின் முதனிலையே"
என இருந்திருக்க
வேண்டும்; ஏனெனில்
"நிலனும் பொரு
ளும்" என்ற சூத்திரத்தில்
அறுவகைப் முடிபுப் பொருள்களே
கூறப்படுகின்றன.

வினை என்பது
தொழிற் பெயர் என்ற
கருத்தில் "நில னும்
பொருளும்' என்ற
பெயரெச்சச்
சூத்திரத்திற்குப்

பொருத்தமாயிருக்கிறது.

உண்ணும் ஊண்,

போயின போக்கு, வனைந்த

வனைவு என்ற

உதாரணங்களில் தொழிற்

பெயரானது முடிபு

நிலையில் பெயராகவே

வருகிறது. ஆனால் "வினையே

செய்வது" என்ற

சூத்திரத்தில் நிலம்

முதலிய மற்ற விபக்திகள்

போல் 'தொழிற் பெயர்'
அவாய் நிலையாய் வருதல்
கூடாததாயிருக்கிறது.
'நிலத்தில் காலத்தில் கருவி
கொண்டு பாண்டத்தை
கருத்தா வினைத்தான்'
என்பது நேரான வாக்கியம்.
இவ்வாக்கியத்தில் வினை
என்ற தொழிற் பெயர்க்கு
இடமின்று. தொழிற்
பெயரும் விபக்தியாய் வரு

வதற்கு வாக்கியத்தை "
நிலத்தில் காலத்தில்
கருவிகொண்டு
பாண்டத்தை கருத்தா
வனைதலைச் செய்தான்"
என நாம்
மாற்ற
வேண்டியிருக்கிறது.
இப்படி மாற்றினால்
'வனைந்
தான்' என்ற பயனிலை

மறைந்து விடுகிறது.

ஆதலின் "நிலனும் பொருளும்" என்ற சூத்திரத்திற்கு "வினையே செய்வது" என்பது தோற்றுவாய் என்பதும் பொருந்தாது.

"வினையே செய்வது" என்ற சூத்திரம்

வினையின் இல

கூஷணம் கற்பிப்பதாக

நன்னூலார் கருதித்

தம்முடைய

நூலில் வினையியல் முதற்

சூத்திரத்தில் " செய்பவன்

கருவி

நிலஞ்செயல் காலம்

செய்பொருளாறும்

தருவது வினையே"

எனக் கூறியிருக்கிறார்.

இச்சூத்திரத்தை அடுத்துப் பின்னுல்

(தொல்காப்பியம் சொல்லதிகாரத்தில்) வரும் ஆகு பெயர்ச் சூத்திரத்தின் கருத்தை நன்னூலார் தம்முடைய பெயரியலி லுள்ள ஆகுபெயர்ச் சூத்திரத்தில் அமைத்திருக்கிருர். வேற்றுமை மயங்கியலில் உணர்த்தப்படும் தொழின் முத



னிலைச் சூத்திரமாகிய ''வினையே செய்வது'' என்பதும் அவ்வியலில் உணர்த்தப்படும்

ஆகுபெயர்ச் சூத்திரம்
போல பெயர் வகையையே
உணர்த்த
எழுந்திருக்கவேண்டும்
என் பதை நன்னூலார்
கவனியாதது
வியக்கத்தக்கதே. உரையாசி
ரியர்களைப் பின்பற்றி
நன்னூலாரும் "வினையே
செய்வது" என்ற சூத்திரம்
பயனிலைக்குரிய

அவாய்நிலையைப் பற்றிச் சொல்வதாகவும் வினையின் மெய்ப் பொருணூலிலக்கணம் கூறுவதாகவும் பிழைபட உணர்ந்தார் என நாம் கருத வேண்டியிருக்கிறது.

நன்னூலார்

இத்தொழின் முதனிலைச் சூத்திரத்தைக்

கையாண்ட முறை:—நன்னூலார் பெயரியலில் "இடுகுறி கார ணம்" என்ற சூத்திரத்தில் பெயருக்கு இலக்கணம் கூறியிருக் கிறார். அங்கே அவர் "வேற்றுமைக்கிடனாய்த் திணைபாலிடத் தொன்றா ஏற்பவும் பொதுவுமானபெயரே" எனக்கூறுகிறார்.

இதேபோல வினைக்கு இலக்கணம்கூறுமிடத்தில் வினைச்சொல் லானது "காலம் ஏற்பதுக்கிடனுய்த் திணைபாலிடந்தோன்று ஏற்பவும் பொதுவுமாவன வினையே" என்று அவர் கூறி யிருக்கவேண்டும். அவ்வாறு கூறுவதற்குப் பதிலாகத் தொல். சொல்லதிகாரத்தில் இன்ன பொருள் குறித்து எழுந்தது என உணரமுடியாத "வினையே செய்வது" என்றும் சூத்தி ரத்திற்கு உரையாசிரியர் பிழைபட உரைத்த உரையை ஆதார மாகக்கொண்டுத் தாம் வினைக்கு இலக்கணம் கூறியிருக்கிறுர். சொல்லதிகாரத்தில் "நிலனும் பொருளும்" என்ற பெயரெச் சச் சூத்திரத்தின் உரையில் அறுவகை முடிபுப் பொருள் களுக்கு மேலும் ஏது, இன்னதற்கு என்னும் 4-ம்வேற்றுமை, இது பயனுக என்பது, எல்லைப்பொருள் என்ற பொருள் களும் தொழின் முதனிலையாக வரும் எனக்கூறுவதால் வினை

# 70

# தொல்காப்பியம்

# ஆறுபொருள்கள்

பெற்றுவரும், என
நன்னூலார் கூறும்
இலக்கணமும்
குன்றக்கூறலாய் முடியும்.

## ஆகுபெயர்ச் சூத்திரம்

முதலிற் கூறுஞ் சினையறி
கிளவியும்
சினையிற் கூறும் முதலறி

கிளவியும்
பிறந்த் வழிக் கூறலும்
பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும்
இரு பெயர் ஒட்டும்
வினைமுதல் உரைக்கும்
கிளவியொடு தொகை இ
அனைய மரபினவே ஆகு
பெயர்க்கிளவி.

பாலறிகிளவி, தொழின் முதனிலை, வேற்றுமைச் சொல் ஆகிய மூன்றும் மூலப் பொருளிடை (Root word) விகுதி பெற்றுத் தத்தமக்குரிய கருத்துக்களை உணர்த்தும். ஒரு

பெயர்ச் சொல் வேறு

விகுதி பெறாது மூலப்

பொருளின்

இயற்கை வடிவத்தோடு நின்று தன் கருத்தை மாற்றி உணர்த்தும் பொழுது ஆகுபெயர் எனப்படும். இவ்வாறு விகுதி பெறாமல் ஒரு பெயர் தன்கருத்தை மாற்றி உணர்த்தும்

பொழுது வடமொழி

யிலக்கணத்தில் விகுதி

தோன்றி

மறைந்தது என

இலக்கணம் கூறுவதுண்டு.

தமிழில் சில

சொற்களுக்குச்
சிவஞான சுவாமிகள்
இவ்விலக்கணத்தைப்
பிரயோகிக்கிறார்கள்.
தனிமொழியான
கிளவிகளின் ஆக்கத்தைப்
பற்றிக்
கூறும்
கிளவியாக்க வியலில்
இச்சூத்திரமும்

இதையடுத்தபிற்
    சூத்திரங்களும்
அமைத்தற்குரிய. வெளி
வடிவத்தில் மாறு
    மல்கருத்தில் பட்டும்
மாறின
படியால் ஆறு பெயர் ஒருவகை
    வேற்றுமை யொழிபு
எனக் கருதப்பட்டு
வேற்றுமை மயங்
    கியலில் உணர்த்தப்பட்

கூறப்படுகின்றன.
இருபெயர்
ஒட்டு என்பதில்
இருவகை ஆகுபெயர்கள்
சுட்டப்படுகின்
றன. இப்புணர்
மொழியானது இரண்டு
கூறுபட்ட பெய
ரொட்டு அல்லது தொகை
எனப் பொருள்படும்.
எழுவாய்

ரூபமுடைய பெயர்ச்
சொல்லானது விகுதி
பெறுமல் வேறு
பெயர்ச் சொல்லையாவது
வினைச் சொல்லையாவது
தழுவி வந்
தால் ஒட்டு எனப்படும்;
தழுவப்படும் முடிபுச்
சொல்லின் வகை இரண்டு
ஆனபடியால் ஒட்டும்
இரண்டு எனப்பட்டது.

பெயரைத் தழுவும்
பெயரொட்டானது
adjective என்ப
தற்கு நேர்; வினையைத்
தழுவிவரும் பெயரொட்டு
adverb
என்பதற்கு நேர்.
வேற்றுமையியலில்"பெயரினாகியதொகையு
மாருளவே" என்னும்
சூத்திரத்தில்
உணர்த்தப்படும்

தொகைச்சொல்
இவ்வொட்டுச் சொல்லை.
விகுதிபெற்ற
தழுவு சொல்லைத்
தொகை என்றும்
விகுதிபெறாத தழுவு
சொல்லை ஒட்டு எனவும்
வழங்கினார்கள் போலும்.
இவ்விருவகை
ஒட்டுக்கள் தவிர
இச்சூத்திரத்தில்

கூறப்பட்ட மற்ற
அறுவகை
ஆகுபெயர்களில் மூலப்
பொருட் சொல்லின்
கருத்து மாறுபடுகிறது;
ஒட்டு என்று
கூறப்படும்
இவ்விருவகைச்
சொற்களில் சொல்லின்
வாய்

பாட்டுநிலை (Part of speech) மட்டும் மாறுபடுகிறது. கருத்துமாறுபடவில்லை. கருத்து மாறுதல் (Change of signification), வாய்பாட்டு நிலைமாறுதல் (Change of Grammatical relation) என்ற இருவகை மாறுதல்களையும் ஓரினமெனக்கருதி இலக்கண விதி கற்பிப்பது தமிழ் முறைக்குமட்டும் சிறப்பன்று. இங்கிலிஷ் இலக்கணத்திலும் இம்முறை அநுசரிக்கப்படுகிறது.

72

தொல்காப்பியம்

Mason என்னும் ஆசிரியரின் இங்கிலிஷ் இலக்கண நூலில் அடியிற்கண்ட வாக்கியம் காணப்படுகிறது.

Etymology treats of their (=separate words) Classification into the groups called parts of Speech, of the changes of form which they undergo to mark differences in their signification or in their grammatical relations, and of the mode in which they are formed out of their constituent elements.

மேற்கண்ட வாக்கியத்தில் கருத்து அல்லது வாய்பாட்டுநிலை என்பவைகளின் மாறுதல்கள் விஷயமாய்ச் சொற்களிற் றோன்றும் வடிவு மாறுதலைப்பற்றிக் கூறும் இலக்கணப்பகுதியும் சொல்லதிகாரம் என்பதன்கண் அடங்கும் என்று கருத்துப்படக் கூறியிருப்பதுகவனிக்கத்தக்கது.

# ஆகு பெயர்.

இவ்விங்கிலிஷ் இலக்கண விதியிற் குறிப்பிட்ட கருத்து மாறுதல், தமிழில் திணைபால் வேற்றுமைகளுக்குரிய விகுதி பெற்றுப் பெயர் தன் கருத்து மாறுதலோடொக்கும். இது இங்கிலிஷ் முறையில் 'Inflexion, declension' எனப் படும். ஆகுபெயர் விதியிற் குறிப்பிட்ட கருத்து மாறுத லானது சொல்லின் கருத்து மாறுதல்.

இவ்விரண்டு இலக்கண முறைகளிலும் குறிப்பிட்ட வாய்பாடு மாறுதல் ஒருவகையையே குறிக்கிறது. 'பொன்' என்பது 'அன்ன' என்னும் விகுதி பெற்றுப் பொன்னன்ன என்று வாய்பாடு நிலைமாறினால் இங்கிலீஷ் இலக்கணத்தில் 'Derivation' அல்லது 'Word Formation' எனப் பெயர்



பெறும். விகுதி

பெறுமல் வாய்பாடு மாறும் முறையானது தமிழில் ஆகுபெயர் விதியில் கூறப்படுகிறது.

ஆகு பெயர்ச் சூத்திரத்தில் 'இருபெயரொட்டு' என்பது இம்முறையைச் சுட்டுகிறது. சேனாவரையர் 'இருபெயரொட்டு' அன்மொழித் தொகையைக் குறிக்கும்

எனக் கூறியது தவறு.
இளம்பூரணரின்
கொள்கைப்படி வேற்றுமை
யியலிலும் வேற்றுமை
மயங்கியலிலும்
பெயர்ச்சொல்லாகிய தனி
மொழியின் இலக்கணமே
கூறப்படுவதால், ஆகு பெய
ரும் தனி மொழியே.
புணர்மொழியாகிய
அன்மொழித் தொகையின்

இலக்கணம் இங்கே
கூறப்படுதல் முறையன்று.
சொல்லதிகாரத்தின்
கடைசி யியலில் பல்வகைப்
பொருள்க ளுடன் சேர்த்து
வேற்றுமைத் தொகை
முதல் அன்மொழித்
தொகை யீருகவுள்ள
புணர்மொழிகளின்
இலக்கணம் கூறப்
படுகிறது.

தொகை,
ஒட்டு, ஒழிபு, எச்சம்,
அசைநிலை:—தமிழ் வாக்
கியமான சொற்றொடரின்
உறுப்புக்களாகிய
தனிமொழி
கள் முதனிலைகள்
எனப்பட்டன.
முதனிலையானது செஞ்
சொல், ஒழிபுச் சொல்,

அசை நிலை என
மூவகைப்படும்.
செஞ்சொல், ஒழிபுச்
சொல் ஆகிய
இருவகைகளினின்று
எஞ்சிய, முதனிலைக்
கிளவியானது எச்சம்
அல்லது அசை
நிலை எனப்பட்டது.
சொல்லதிகாரம்
இடையியலில் உணர்த்

தப்படும் ஏ, ஓ, மன், கொல், தில், கொன் முதலிய அசை நிலைகளெல்லாம் ஆதி காலத்தில் எச்சம் எனப்பட்டுக் கடைசியிலான எச்சவியலில் உணர்த்தப்பட்டிருக்கவேண் டும். எச்சவியலிலுள்ள "பிரிநிலை வினையே" என்ற

சூத்திரத்

தில், ஏ, ஓ ஆகிய பிரிநிலைகள், எதிர்மறை (ஏ, ஓ, உம் முத லிய), என முதலிய அசை நிலைகளெல்லாம் எஞ்சுபொருட்



கிளவி எனக்

குறிப்பிடப்படுதல்

கவனிக்கத்தக்கது. இச்

சூத்திரத்தின் உரையில்

சேனாவரையர் “எஞ்சு

பொருட் கிளவி யெனினும்

எச்ச மெனினும் ஒக்கும்"
என் று கூறு

வது கவனிக்கத்தக்கது. எச்சவியலில் உணர்த்தப்பட்ட அசைநிலைச் சொற்கள் பிற்காலத்தில் 'இடைச்சொல்' எனப் பட்டு இடையியலில் சேர்க்கப்பட்டன.

இவ்வாறு அசைநிலை என்னும் கருத்தைக் குறிக்காமல் காவியாய் நின்ற 'எச்சம்' என்னும் குறியானது பிற்கால ஆசிரியரால் வினைமொழிபு எனப்படும் பெயரெச்சம் வினையெச்சம் ஆகிய இருவகைக்கும் குறியாக இட்டு ஆளப் பட்டது. இவ்விபரம் வினையியலிலுள்ளதும் 'செய்யும்' என்னும் பெயரெச்சத்திற் குரியதுமான "அவற்றொடு வருவழி" என்ற சூத்திரத்தின் உரையில் சேனாவரையரால் கூறப்படுகிறது. அக்கூற்று வருமாறு: "முற்றுச் சொல்லிற்கும் எச்சத்திற்கும் வேற்றுமை யாதெனின், பிறிதோர் சொல்லோடியையாது தாமே தொடராதற் கேற்கும் வினைச்சொல் முற்றாம்; பிறிதோற் சொற்பற்றியல்லது நிற்றலாற்றா வினைச் சொல் எச்சமாம். இது தம்முள் வேற்றுமை என்க...... இவ்வேற்றுமை விளங்க ஆசிரியர் முற்றுச் சொல்லென்றும்

எச்சமென்றும் அவற்றிற்குப் பெயர் கொடுத்தார்'' அசை நிலைக்குரிய 'எச்சம்' என்னும் குறி இவ்வாறு வினையொழி பாகிய வினையெச்சம் பெயரெச்சங்களுக்கு வழங்கிவிடப் படவும், அசைநிலையை முதலாவதாக உரிச்சொல்லென்றும் இரண்டாவதாக மாறி இடைச்சொல்லென்றும் ஆசிரியர்கள் குறிபிட்டாண்டார்கள் எனத் தெரிகிறது.

உரியியலின் முதற் சூத்திரத்தில் "இசையினும் குறிப்

பினும் பண்பினும்
தோன்றி" என்பதில்
இசை, என்பதும்



குறிப்பு என்பதும்
இவ்வகை நிலைகளைச்
சுட்டவே ஆதியில்
பிரயோகிக்கப்
பட்டனவாகத்

தெரிகிறது. இடையியல் இரண்டாவது சூத்திரத்திலுள்ள "இசைநிறைக்கிளவி யாகி வருநவும்; தத்தங் குறிப்பிற் பொருள் செய்குநவும்" என் னும் இரண்டடிகளும் இசை, குறிப்பு என்ற இவ்வசைநிலை களையே சுட்டுகின்றன.

எச்சவியலிலுள்ள 27-வது
சூத்திரத்திலுள்ள
"இசைபடு பொருள்"
என்பதும் 28, 29, 30- வது
சூத்திரங்களிற் சொன்ன
குறிப்புச் சொற்களும் இவ்
வசை நிலைகளைக்
குறித்தனவே. 'எச்சம்'
தனக்குரிய 'அசைநிலை'
என்னும் பொருள் இழந்து
விடவும், அசைநிலை

உரிச்சொல்
எனப்பட்டது. பின்னல்
உரியியலிலுள்ள இசை,
குறிப்பு என்பனவற்றிற்கு
வேறு கருத்துக் கொடுத்து
அவை பெயர்ச் சொல்லையும்
தொழிற்பெயரையும்
சுட்டினவாகக்கொண்டபின்,
அசைநிலைச் சொற்கள்
இடைச்சொல் எனப்பட்டு
மேற்சொன்ன

இரண்டடிகள் இடையியலிற் சேர்க்கப்பட்டன.

## ஒட்டு என்னும் குறி

இனி நாம் கவனிக்கவேண்டியது வினையொழிபாகிய எச்சங்களுக்கு 'எச்சம்' என்னும் குறி

வழங்கப்படுமுன் அவை

எக்குறியால் ஆளப்பட்டன என்பது. வினையொட்டு, பெய ரொட்டு, தொழினிலை யொட்டு என்று பல குறிகள் சொல்

லதிகாரச் சூத்திரங்களின்

உரைகளிற்

கேட்கப்படுகின்றன.

இவை பிற்காலத்தில் உண்மைப் பொருளை உணர்த்தாமல் சிதைந்த கருத்துடன் வழங்கப்படுகின்றன. வினையியல் முதற் சூத்திரத்தின் உரையில் சேனாவரையர் தொழினிலை ஒட்டு என்பதைத் தொழிற் பெயர் அல்லது வினையாலணையும்

பெயர்* என்ற கருத்தில்
வழங்குகிருர்; அவர்க்கு
அவ்வாறு
வழங்குவதற்கு
முன்பிரயோகம்
கிடையாது. ஏனெனில்
தொழிற்பெயரைப்
பெயரியற் சூத்திரங்களில்
வினைப்பெயர்
என வழங்கியிருக்கிறது.

'வினையியலில்

பெயரெச்ச வினையெச்சங்கள் செஞ்சொல்

வினையுடன் சேர்த்து

உணர்த்தல் தகாது'

என்ற இலக்கணக்

கொள்கையுடைய கட்சியார்க்கு விரோதமாகச் சேனுவரையர் வினையியலின் முதற் சூத்திரத்தில் வினை என்பது எச்சத்தையும் தன்னுள் அடக்கும் பொருட்டு ஆசிரியரால் இலக்கணம் கற்பிக்கப்பட்டிருக்கிறது என்பதைக் காட்டப் பெயரெச்ச வினையெச்சம் என்னும் சொற்கூற்றைக் குறித்த 'தொழினிலை யொட்டு' என்பதை வினையாலணையும் பெயர் என்னும் கருத்தில் வழங்கி இச்சூத்திரம் வினையாலணையும் பெயரை நீக்கிற்றே தவிர எச்சத்தை நீக்கவில்லை என்று உணர்த்துகிறார். இக்கூற்றிலிருந்து செஞ்சொல்லுடன் எச்

சம் உணர்த்தல் தகாது

என்று கொண்ட
எதிர்க்கட்சியார்
தம் வாதத்தில்
'தொழினிலை ஒட்டு'
என்பதை 'எச்சம்'
என்ற கருத்தில்
வழங்கியிருக்கவேண்டும்
என்று தெரிகிறது.
அவர்கள் வினையின்
இலக்கணம் கூறும்
முதற் சூத்திரம்

செஞ்சொல் வினையைக் குறித்ததே தவிர, தொழிநிலை யொட்டு எனப்படும் எச்சத்தைப்பற்றிப் பேசவில்லை என்று

# வாதித்திருக்கவேண்டும்.

# சேனாவரையர் 'எச்சம்'

# என்ற

புதுக்குறி தொழினிலை யொட்டு என்ற பழைய குறியை அப்

---

* பெயரியல் 11,14 வது சூத்திரங்களில் வினையாலணையும் பெயரைக் குறிக்க 'வினைப் பெயர்' என்ற குறி பிரயோகப்படுகிறது. தொழினிலை யொட்டு என்ற குறி இங்கே பிரயோகப்படவில்லை.



# புறப்படுத்தி விட்டதால்

அப்பழைய குறிக்குத் தாம்
'தொழிற் பெயர்' என்ற
வேறு கருத்துக்
கொடுத்து 'வினை' என்
பதன் இலக்கணச்
சூத்திரத்தில்
நீக்கப்பட்டது தொழினிலை
யொட்டுந் தொழிற்
பெயரே யொழிய,
தொழினிலை யொட் டாகிய
எச்சமன்று என

வாதஞ்செய்கிருர்.

'ஒட்டு' என்னும் குறி

ஆதியில் 'தழுவு சொல்'

என்ற ' பொதுக்கருத்தில்

வழங்கினதாகத்

தெரிகிறது. நச்சினர்க்

கினியர் எழுத்ததிகாரத்தில்

தம்முடைய உரையில்

பெயர்ப்

பெயர், ஒட்டுப் பெயர் எனப் பெயர்த் தனிமொழியை இரு வகையாகப் பிரிக்கிருர். அவர் ஒட்டுப்பெயர் என்பது

பெயரைத் தழுவும்
சொல் (adjective).
'அறுவகை யொட்டு'
என்பதிலும் ஒட்டு என்பது
தழுவு சொல்லென
முன்னமே
காட்டப்பட்டது.
'இருபெயரொட்டு' என்ற
வ்ழக்கானது
'இருதொழிலொட்டு' என்ற
தொடர் ஒன்று

வழங்கியிருக்கவேண்டும், எனக் காட்டுகிறது. ஆதலின் பெயரெச்சம் வினையெச்சம் என்னும் இரண்டு வாய்பாடு களும் எச்சம் என்னும் குறியால் ஆளப்படும்முன் பெய ரொட்டு, வினையொட்டு என்ற குறிகளால் ஆளப்பட்டு 'இரு தொழிலொட்டு' என வழங்கப்பட்டிருக்கவேண்டும்.

# ஒழிபு

## அறுவகை

## ஒட்டுக்களைப்பற்றி நாம் பேசும்போது

செஞ்சொற்கள், வழிமருங்குச் சொற்கள் என இருவகைச் சொற்களைப்பற்றிப் பேசினோம். அங்கே பெயர்ச்சொல், இடைச்சொல், வினைச்சொல் ஆகிய மூவகையும் செஞ்சொல் என்றும் அவற்றினின்று பிறந்த தழுவு சொற்கள் வழி

தொல்காப்பியம்

'ஒட்டு' எனப்பட்டன. உரையாசிரி

சொற்களை ஒழிபுச் சொற்கள் என

எச்சவியலினுள்ள

"பிரிநிலைவினையே" என்ற

சூத்திரத்

தின் உரையில்

நச்சினார்க்கினியர்

வினையொழிபு, இடை

யொழிபு என இருகுறியீடுகள் குறிப்பிடுகிறார். வினையொழிபு என்பதில் பெயரெச்சம் வினையெச்சம் என்னும் இரண்டு வகையையும் குறிக்கிறார். இடையொழிபு என்பதில் பிரிநிலைப்பொருள்தரும் ஏ, ஓ, முதலிய அசைநிலைகளைக் குறிக்கிறார். சேனாவரையர் இவ்வொழிபுகளைப்பற்றிப் பேசும்போது "எச்சமாவன ஒருசார் பெயரும், வினையும், இடைச்சொல்லுமாதலின், பெயரியன் முதலானவற்றுட் பத்தும் ஒருங்குணர்த்தற்கேலாமை அறிக'' எனப் பொன் போன்ற மொழிகளைச் சிதறுகிறார். விளக்குப்போன்ற இக் கூற்றினின்று பெயரொழிபு, வினையொழிபு, இடை யொழிபு என மூவகை யொழிபுகள் இலக்கணத்தில் காணப்பட்டன

என்று தெரிகிறது. ஒரு சார் பெயர் என்பது பெயரொழிபு; ஒரு சார் வினை என்பது வினையொழிபு; ஒரு சார்

இடைச்
சொல் என்பது
இடையொழிபு.

மேலும்
சேனாவரையருடைய
மேற்கண்ட கூற்றில், பெய
ரொழிபு பெயரியலில்
உணர்த்தப்பட்டிருப்பதாகவும்,
வினை

யொழிபு வினையியலில் உணர்த்தப்பட்டிருப்பதாகவும் இடை
யொழிபு இடையியலில் உணர்த்தப்பட்டிருப்பதாகவும்

மூவகை யொழிபுகளும்
சிறப்பிலக்கணம் கூறும்
அம்மூன்று
இயல்களில் ஒருங்கு
உணர்த்துவதற்கு நியாயம்
இல்லை என
வும் அவை பல்வகைப்
பொருள்களுடன் ஒழிபுகளைப்
பற்றி

யும் கூறும்
இவ்வெச்சவியலில்
உணர்த்தப்பட்டிருப்பனவாக
வும் முதலான
இக்கருத்துக்கள் பொதிந்து
கிடக்கின்றன.

செஞ்சொல்லைப்பற்றிக்
கூறும் பெயரியலில்
அவாய் நிலைப்
பொருள் தரும்

பெயரொழிபு கூறுவதற்கு
இடமின்று. இளம்பூரணர்
உரையின் பிரகாரம்
பெயரிலக்கணம் வேற்று
மையியலில்
தொடங்குகிறது; ஆதலால்
வேற்றுமையியலும்
பெயரிலக்கணம் கூறும்
பாகமே.
வேற்றுமையியலில் "பெய
ரிஞகிய

தொகையுமாருளவே"
என்ற சூத்திரத்தில் நாம்
முன் ஆராய்ந்து
துணிந்தபடி
பெயரொழிபுகள் கூறப்பட்டி
ருக்கவேண்டும். இப்பெய
ரொழிபுகள் மீண்டும்
பெயரியலு டன் விஷயத்தால்
ஒற்றுமையுடைய உரியியல்
முத்ற் சூத்தி ரத்தில்
மெய்தடுமாறிய சொற்கள்

எனக் குறிப்பிடப்படுகின்றன. 'பொன்னொத்த' என இசை அல்லது பெயரிற் பிறந்த பெயர்த் தொகையும் (Adjective) 'சிறப்புடைய, கடமைப் பட்ட,' என்பன போன்ற தொழிற் குறிப்பிற்பிறந்த பெயர்த் தொகையும் 'நல்ல, தீய' போன்ற பண்பிற் பிறந்த பெயர்த்

தொகையும்

பெயரொழிபுகளில்

பெயரைத்தழுவும் கூறுக

ளுக்கு உதாரணமாகக் காட்டப்படலாம்

பென்ணுத்து,

சிறப்பாய், கடமையாய்,

நன்ருய்,

தீதாய் முதலிய சொற்கள்

வினையைத்தழுவும்

பெயரொழி

புக்கு (adverb)
உதாரணங்களாகக்
காட்டப் படலாம்.

உரியியல் முதற்
சூத்திரத்தின் உரையில்
பெயரையும்
வினையையும் தழுவும்
இவ்விருவகைப்
பெயரொழிபுகளும்
முறையே பெயர்க்கு
முதனிலை எனவும், வினைக்கு

உணர்ச்சியின் பாலது]

இப்பெயரொழிபுகள் ஆதிகாலத்தில் பெயர்த் தொகை வினைத்தொகை எனக் குறியிடப் பட்டிருக்க வேண்டும்.

"பெயரினாகிய தொகையுமாருளவே" என்னுஞ் சூத்திரத்தின் உரையில் 'நிலங்கடந்தான்" என்பது போன்ற தொடர்களை உரையாளர்கள் வினைத்தொகை எனக் கூறுவது பொருத்தமன்று. 'அடுகளிறு' போன்ற தொடரையாவது, அத்தொடரின் நிலைமொழியாகிய 'அடு' என்பதையாவது வினைத்தொகை எனக் கருதுவதும் பிந்திய காலத்தில் ஏற்பட்ட வழக்கமாகத் தெரிகிறது. பெயர்த்தொகைபோல் ஆதியிலுள்ள வினைத்தொகை பெயரின் திரிபாயிருந்த தென்பது 'வினையின் றொகுதி' என்ற சூத்திரத்தின் உரையில் சேனாவரையர் 'அடுகளிறு' போன்ற தற்கால வினைத்தொகையில் 'அடு' என்பது தொழிற் பெயர் என அசம்பாவிதமாகக் கூறு

வதிலிருந்து உய்த்துணரப்படலாம்.

வினை யொழிபுகள்:—சொல்லதிகாரம் ௭௪௪ வியலி லுள்ள 'பிறிநிலை வினையே'' என்ற சூத்திரத்தின் உரையில் நச்சினார்க்கினியர் பெயரெச்சம் வினை யெச்சம் ஆகிய இரண்டு கூற்று வாய்ப்பாடுகளும் வினை யொழிபுகள் எனக் கூறுகிறார். பெயரிலக்கணத்தின் பகுதியான வேற்றுமையியலில் பெயரொழிபுகளான பெயர்த் தொகையும் (adj.) வினைத்தொகையும் (adv.)எவ்வாறு உணர்த்தப் பட்டனவோ, அவ்வாறு வினையியலில் வினையொழிபுகளான வினையெச்சம் பெயரெச்சம் (participial adv. and participial adj.) ஆகிய இரண்டுவகையும் உணர்த்தப் பட்டன. "அவற்றொடு வரு வழி" என்ற

றபடியால்
வினையெச்சமும்
பெயரெச்சமும்
ஆதியில்
வினையொட்டு, பெயரொட்டு
என முறையே
குறியிட்டாளப்
பட்டிருக்க வேண்டும்,
என்று ஊகிப்பதற்கு
இடமுண்டு.
இவை இரண்டும்

சேர்த்துத் தொழினிலை
ஒட்டு என வழங்
கப்பட்டதாகத் தெரிகிறது.
இடை
யொழிபுகள்:—நச்சினார்க்கினியர்
இக்குறியைப்
பிரயோகிப்பதிலிருந்து,
இடைச் செஞ்சொல் என
ஒருவகை
இருக்கவேண்டும்
எனத்தெரிகிறது.

சொல்லதிகாரம் பெய

ரியலில் எடுத்தோதப்பட்ட

“அவனிவன் உவன்

அவனிவள்

உவள் அவரிவர்

உவர்யான்யாம் நாம்யாவன்

யாவள் யாவர்

எல்லாரும் எல்லீரும்

அதுவிது வுது அஃது

இஃது உஃது அவையிவை

யுவை அவ் இவ் உவ் யாது

யாவை பல்ல பல

சில்ல சில தாம், தான்,
எல்லாம், நீயிர், நீ, ஒருவர்''
முதலான
எல்லாப் பெயர்களும்
இடைப்பெயரான
செஞ்சொற்களே.
பிற்காலத்தில் உரிச்
செஞ்சொல் (Concrete
nouns &
other nouns proper),
இடைச் செஞ்சொல்

(pro-
nouns)என்ற இருவகையும்
ஒழிக்கப்பட்டு எல்லாம்
பெயர்ச்
சொல்லே என
ஒற்றுமைப்படுத்தப்பட்டபின்,
இடையொழி
புச்சொற்களான அந்த,
அவ்வாறு என்பன
போன்றவையும்
உரியொழிபுச்

சொற்களான பெரிய, நல்ல

பெரிதாய், நன்றாய்

என்பன போன்றவையும்

பெயரொழிபுகளெனக்

கருதப்பட்

டுப் பெயர்த் தொகை,

வினைத்தொகையாயின.

ஆதலின் ஆதியில் 'எச்சம்' என்ற கூற்றில் அமைக்கப் பட்டுப் பின்னால் காலாந்தரத்தில் முறையே 'உரி' என்றும்,

'இடை' என்றும்

குறியிட்டாளப்பட்டவையும்

இடையிய

'இடையொழிபு' எனநச்சினார்க்கினியரால் சுட்டப்பட்டவகையிற் சேர்ந்தனவாகக்கருதப்பட்டன. "பிரிநிலைவினையே" என்ற

சூத்திரத்தில் பிரிநிலை முதலியவாகச் சுட்டப்பட்ட இவ்வகை நிலைகளைத் தான் நச்சினார்க்கினியர் 'இடையொழிபு' என்னும் குறியால் சுட்டுகிறார். இவ்விடையொழிபுகள் ஆதியில் 'எச்சம்' என்னும் குறியால்

வழங்கப்பட்டனவாகத்
தெரிகின்ற மையின்
இவ்வகை நிலைகளைத்
தனியே
உணர்த்தும்பொருட்
டே ஆதியில் 'எச்சவியல்'
என்றும் தலைப்புப்
பெயருடை இயல்
ஏற்பட்டது.
இப்போழ்தும்
''இசைநிறை, விரைசொல்,

கண் டீர், கேட்டை''
முதலான
அசைநிலைகளெல்லாம்
எச்சவிய லில்
உணர்த்தப்பட்டுக்
கிடக்கின்றன. பல
அசைநிலைகள்
மேற்சொன்னபடி வேறு
இயல்களுக்கு
மாற்றப்பட்ட பின்
னும்

செய்யுளீட்டச்சொல், விகாரச்சொல், வேற்றுமைத்
தொகை முதலிய புணர்மொழிகள் முதலான நானாவிதப் பொருள்கள் எச்சவியலில் கொணரப்பட்டுச் சேர்க்கப்பட்ட
பின்னும் 'எச்சம்' என்னும் குறி 'எஞ்சிய பொருள் (remain-

ing topics) என்னுங் கருத்துடையதாகக் கூறப்பட்டது.

## உரிச்சொல்.

இடை, உரி என்ற இருவகைக் கூறுபாடு ஒழிந்து எல்லாச் செஞ்சொற் பெயர்களும் 'பெயர்' என்றே குறியிடப்

பட்டு

வழங்கப்பட்டபின் இடை, உரிஎன்னும் இருகுறிகளும்

பெயரையும்

வினையையும் தழுவும்

ஒழிபுச் சொற்களான

வழிமருங்குச் சொற்களுக்கு வழங்கப்பட்டன. பிற்காலத்தில் இவ்வொழிபுச் சொற்களில் வினையெச்சம் பெயரெச்சம் என்னும் இருவகையும் 'எச்சம்' எனப்பட்டு வினையியலில்

செஞ்சொல் வினையுடன் சேர்த்து உணர்த்தப்பட்ட பின்னும் அசைநிலைக் கூறுகள் 'இடைச்சொல்' எனப்பட்டு இடையியலில் உணர்த்தப்பட்ட பின்னும் பெயர்த்தொகை (adj.), வினைத்தொகை (adv.) யாகிய இருவகைப் பெயரொழிபுகள் 'உரி' எனப்பட்டு உரியியலில் முதற்சூத்திரத்தில் 'மெய்தடுமாறிய' சொற்கள் எனக் கூறப்பட்ட வகையில் அடக்கப்பட்டன.

"மெய்தடுமாறிய" என்றால் திணை பால் இடம் முதலிய பொருள்களை நிச்சயமாக உரைப்பதில் தவறுகிற என்பது கருத்து. சொல்லதிகாரம் விளி மரபு 2-வது சூத்திரத்திலுள்ள "உயர்திணை மருங்கின்மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே" என்பதில் 'மெய்ப்பொருள்' என்பது திணை நிச்சயப் பொருள் என்ற கருத்தில்

பிரயோகிக்கப்பட்

டிருக்கிறது. அதுபோல்

இவ்வுரியியற் சூத்திரத்திலும் 'மெய்'

என்பது அக்கருத்தில்

பிரயோகிக்கப்பட்டிருக்கிறது.

தொட

ரின் உறுப்பான எல்லாத்

தனிமொழியும் 'முதனிலை'

என்ற

குறியால் ஆதிகாலத்தில் ஆளப்பட்டு வந்தமையின் இம் மெய் தடுமாறிய அவாநிலைச் சொல்லும் முதனிலை என்றே பொதுக் கருத்தில் வழங்கப்பட்டது.

பிற்காலத்தில்

பெயர்ச் செஞ்சொற்களில்

பண்புமட்

டும் குறிக்கும்

செஞ்சொல்லை

'உரிச்சொல்' என

வழங்கி

காட்சிக்கு வெளிப்பட்ட

பொருட் பெயரினின்றும்

பிரித்த

னர். இப்பண்புச் சொல்லும் தொடரின் உறுப்பான 'முத
னிலை'யானதால் முதனிலை எனப்பட்டது. ஆகவே 'உரிச்

சொல்' என்ற வகையில் செஞ்சொற்களில் சிலவும், அவாய் நிலைச் சொற்களில் சிலவும் அடக்கப்பட்டன. பிற்காலத்தில் 'அடை சினை முதல்' என்ற தொடரிற்போல முதனிலை என்



பது 'செஞ்சொல்லுக்குமட்டும்' வழங்கத் தொடங்கியது. வேற்றுமையியலிலுள்ள "இரண்டாகுவதே," என்னும் சூத் திரத்தில் 'வினையே

வினைக்குறிப்பவ்விரு
முதலில்' என்பதின்
செஞ்சொல் வினையானது,
'முதல்' எனப்படுவது
கவனிக்கத்
தக்கது.*
ஆகவே 'முதனிலை'
எனப் பொதுவாய்க்
கூறப்பட்ட
உரிச்சொல்லும் பெயர்ச்
செஞ்சொல்லாகவும் வினைச்
செஞ்

சொல்லாகவுமே வரும் என உரையாசிரியர்களால் பிழைபட

உணரப்பட்டது.
இவ்வாறு பிழைபட்ட உணர்வினிமித்தம்

உரியியல் முதற் சூத்திரத்தின் உரையில் சேனாவரையரால்

துவைத்தல், துவைக்கும் என்னும் உதாரணங்கள் உரிச்

சொல்லுக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. 'துவைத்தல்' என்பது 'தொழிற் குறிப்பு' என்ற நிலைமையில் உரிச்சொல் ல்ாகக் கருதப்படுவதற்கு உரித்தான போதிலும் 'துவைக்கும்' என்பது உரிச்சொல் எனச் சொல்லப்படுவதற்கு

நியாயமே

கிடையாது.

இனி 'வினையே செய்வது' என்னும் சூத்திரத்திலுள்ள 'முதனிலை' என்பது $ "அதுச் சொல்" என்னும் சூத்திரத்

---

* சேனாவரையர் உரையில் 'முதல்' என்பதைச் செயப்படு

பொருள் எனக் கொள்வது வேண்டாததொன்று.

இக்கஷ்டத்தி

னின்றும் விலகத் தெய்வச் சிலையார் 'வினை, வினைக்குறிப்பு'' என்

பன செயப்படு பொருள் என்று அசம்பாவிதமாகக் கூறுகிருர்.

$ 'வினையே செய்வது' என்ற சூத்திரத்தில் 'முதனிலை' என்

பது செஞ்சொல்வினை, எச்சவினை, செஞ்சொற் பெயர் ஆகிய எவ்வகையும் குறிக்கவும், அது பெயர் ஒன்றையே குறித்ததாகத் தவறுதலாக உணர்ந்து அப்பெயர்வகைதான் 'இரண்டாகுவதே' என்னும் சூத்திரத்தில் 'வினை' வினைக்குறிப்பு'' எனப்படுகின்றன என்று தெய்வச் சிலையார் உண்மை பிறழக் கூறுகிறார்.

தின் உரையில்
நச்சினார்க்கினியரால்

'அவாய்நிலை' என்ற

கருத்தில்
கொள்ளப்படுகிறது.
இக்கருத்தை அநுசரித்து
உரியியல் முதற்
சூத்திரத்தின் உரையில்
நச்சினார்க்கினியர்.

"தாவாத" என்னும்
சொல்லையும்

உரிச்சொல்லுக்கு உதாரண

மாகக் கொடுக்கிறார்.

ஆதலின்

உரிச்சொல்லானது

செஞ்சொற் பெயராயும்

செஞ்சொல்வினையாயும்

அவாய் நிலையாயும் வரும்

எனச்

சில ஆசிரியர்களால்

பிழைபட உணரப்பட்டது.

மேலும்

மெய்தடுமாறிய சொல்லானது எழுத்ததிகாரத்தில் குறைச்சொல் எனப்பட்டது. குறைச்சொல் என்ற

குறி பொருள் நிச்சயமில்லாத இந்த அவாய்நிலைச் சொல்லைத் தான் சுட்டியது என்ற கருத்தை விடுத்து நச்சினார்க்கினியர் "இரட்டைக் கிளவி" எனப்பட்ட ஒரு வகையைக் குறித்த தாகக் கொண்டு அக்கருத்துக் கேற்ப விண்ண விணைத்தது, வெள்ள விளர்த்தது, ஒல்ல ஒலித்தது என உதாரணங்கள் கொடுத்திருக்கிறார்.

குறைச் சொல் இத்தன்மைத்து என நச்சினார்க்கினியர் ஒருவகையாய்க் கொள்ளத் தெய்வச் சிலையார் 'குறைச் சொல்' வினைச்சொல்லின் காரணமாகிய 'தாது' என்னும் வடமொழிக் கருத்துக்கு நேர் எனப் பிழைபடக் கூறினர்.

இப்பிழைக்குக் காரணம் 'உரிச்சொல்லானது' முதனிலை என

உரியியல் முதற் சூத்திரத்தின் உரையில் சொல்லப்பட்டது

என்பதே. 'முதனிலை' என்பது தொடரின் உறுப்பான

சொல்லைக் குறிக்கிறது என்பதைத் தவிர்த்து

முதல் என்ப

தைக் காரணம் எனக் கருதி முதனிலை என்பது சொல்லின் மூலகாரணமான தாதுவைக் குறிக்கிறது என்

பதே. சேனாவரையரும்

வினையின் முதனிலையை,

வட நூலார் 86

தொல்காப்பியம்

தாது வென்ப என

ஓரிடத்திற் கூறுகிறார்.

அவரே வேறோரி டத்தில்

'கரு' என்பது போன்று பண்பு மாத்திரம் உணர்த்தும் சொல்லை முதனிலை எனக் கூறுகிறார். இவ்விடங்களில் சேனவரையர் 'உரிச்சொல்' என்னுங் குறியைப் பிரயோகிக்க வில்லை. ஆகவே சொல்லின் மூலமானது உரிச்சொல் என்ப தற்குச் சேனவரையர்

# ஆதாரம் கொடுக்கவில்லை: நச்சினார்க் கினியர் உரையிலும் சொல்லின் மூலம் உரிச்சொல் என்பதற்கு ஆதாரம் கிடைக்கவில்லை.

"மொழிப் பொருட்காரணம் விழிப்பத் தோன்றா" என்பதிலும் காரணம் தெரியவில்லை என்று கூறியிருக்கிறதே யொழிய அக்காரணம் உரிச்சொல் எனும் குறிக்கு உரித்து எனக் கூறப்படவில்லை. "எழுத்துப் பிரிந்திசைத்தல் இவணியல் பின்றே" என்பதில் பண்புபோன்ற (காட்சிக்கு) வெளிப்படா உரிச் சொல்லில் திணைபாலிட விகுதிகள் இல்லாமையால் விகுதி பிரித்து அச்சொல் இன்னதிணைப்பாற்பட்டது என நிச்சயம் செய்ய முடியாது என்பதுதான் கருத்து.

உரியியல் முதற் சூத்திரத்தில் குறிப்பிட்ட உரிச்சொற்கள் இருவகை; முதலாவது பண்புணர்த்தும் உரிச்சொல்; இரண்டாவது அவாய் நிலைப் பொருளில் வந்து திணை நிச்சயம் கூறுதவையும்

எழுத்துப்

பிரிந்திசைப்பவையுமான

குறிப்

புப் பெயரெச்சம் குறிப்பு

வினையெச்சம் ஆகிய

இருவகையும்;

இவைதான் ஆதியில்

பெயர்த்தொகை,

வினைத்தொகை

எனப்பட்டவை.

அவ்விருவகை

உரிச்சொற்களில் பண்புச்

சொல்மட்

டுமே முன்னர்க்

கூறப்படும்

'எழுத்துப்பிரிந்திசைத்தல்

இவணியல் பின்றே'

என்ற சூத்திரத்தில்

சுட்டப்பட்ட

சொல்லதிகார

விளக்கம்

87

வகை. இதிலிருந்து
உரிச்சொல் எல்லாம்
எழுத்துப் பிரிந் திசைபா
என்று கூறப்பட்டது
எனச் சொல்லமுடியாது.

மேலும் பெயரிலும் வினையிலும் மெய் தடுமாறி என்ப
தில் பெயர்ப்பொருளிலும் (Nominal root) வினைப்பொரு
ளிலும் (Verbal root) பதங்களாகப் பொருள்படும்படி

சிதைந்து என்ற கருத்துத்
தொனிப்பதால் எல்லாச்
சொல் லும் உரிச்சொல்
எனக் கருதப்பட்டதோ,
என்ற ஓர் ஐயத் திற்கு
மிடமிருக்கிறது.

உரையாசிரியர்களால் மேற்சொல்லப்பட்ட நிச்சயமில்

லாக் கூற்றுக்களிலிருந்து

பிரயோக விவேக நூலின்
ஆசிரியர் எல்லாச்
சொல்லும் உரிச்சொல்லே
எனப் பிழைபடக் கூறினர்.

சிவஞான சுவாமிகளும்
"நட, வா" முதலிய
பகுதிகள்
உரிச்சொல் எனக்
கூறினதற்கும்

சொல்லதிகாரத்திலும்
சேனாவரையர்
நச்சினார்க்கினியர்
உரைகளிலும் ஆதாரம்
கிடையாது. நன்னூலார்
“பெயர் வினை இடை, உரி”
எனா நான்கும் பகாப்பதம்
என்று கூறினதில்
வினைப்பகுதி வேறு
உரிச்சொல் வேறு எனவே
கருதியிருக்கிறார்.

சுவாமிநாத தேசிகர் 'பெயர்,
வினை, இடை, உரி,'
என்பனவற்றில் உரி
என்பது பண்புச் சொல்லைக்
குறிப்பது என்று
கருதுவதும், உரியியல்
முதற் சூத்திரத்திற்
சொல்லப்பட்ட இருவகை
உரிச்சொற்களில்
பண்புரிச்சொல்
என்ற வகைக்குமட்டும்

பொருந்துமே யொழிய,

மெய் தடுமாறிய வகைக்குப்

பொருந் தாது. சுவாமிநாத

தேசிகர் "போல்"

என்றும் 'வினைச்

சொல்லை இடைச்

சொல்லிற்கு உதாரணமாகக்

கொடுத்திருந்து

விருந்து ஆதி காலத்தில்

'இடை' என்பதற்கும்

'உரி' என்ப 88

தற்கும் ஏற்பட்ட
அடிப்படையான
காரணத்தை அவர்
உணர்ந்தார் என்று கூற
இயலாது.

ஆகவே உரி
என்பது ஆதி காலத்தில்
பெயர்ச்சொல் லைக்
குறித்தது என்றும்

இடைச்
சொல்லினின்றும்
பொருள்புணரும்
சொல்லெனப் பிரித்து
உணரப்பட்டது என்றும்,
பிந்திய காலத்தில்
பெயர்ச்சொல்லின் பகுதி
யாகிய முன்னத்தின்
கிளவியையும் பெயரிற்
பிறந்த இருவகைத்
தொகைச் சொற்களையும் *

குறித்தது என்றும்

ஒரு காலத்திலும்

வினைக்குரிய தாதுவை

யாவது, வேறு பெயர்க்

காரணச் சொல்லையாவது

குறித்ததில்லை என்

றும் உரிச்சொல்லில்

பெயரானது வெளிப்படுசொல்,

வெளிப்

படா வுரிச்சொல் என

இருவகையாகப்

பிரிக்கப்பட்டது
என்றும், இவை
இயற்சொல்லென்றும்,
திணைபால் இடங்க
ளுக்குரிய
விகுதிபெற்றனவல்ல
என்றும்,'முதனிலை'
என்னும்
சொல்லைப் பல்
கருத்துக்களில் ஆசிரியர்கள்
ஆண்டதிலிருந்து

உரிச்சொல் விஷயமாகப்
பிறழ்ந்த உணர்வு
ஏற்பட்டதென்
றும் தெரியப்பட்டது.

"இடைச்
சொல்லெல்லாம்
வேற்றுமைச் சொல்லே"
"உரிச்சொல் மருங்கின்
உரியவையுரிய" என்ற
இவ்விரண்டு

சூத்திரங்களும்:—இவை
பிற்காலத்தில் தோன்றிய
ஐயப்பாடு
களை நீக்க எழுந்தன.
இடைச் சொல்லில்
அவன், அவள்
முதலிய
செஞ்சொல்லானது பெயரியலில்
ஓதப்பட்டபின்
அவ்வகையில்
செஞ்சொற் கிடையா,

அவாய் நிலைக்
கூறே உண்டு என
வற்புறுத்துவதற்கு
இங்கே காட்டிய
முதற் சூத்திரம்
எழுந்தது. 'அவ்வாய்,
அதனால்' என்

* பிற்காலத்தில் இவை குறிப்பு வினையெச்சம், குறிப்புப் பெயரெச்சம் எனப்பட்டன.

பனபோன்ற அவாய்

நிலைச்சொற்களைமட்டும்

இடைச்

சொல்லெனக்

குறிப்பதற்கு இச்சூத்திரம்

இயற்றப்பட்டது.

'எச்சம்' எனக்

கருதப்பட்ட

அசைநிலைகளைக் குறித்து

இச் சூத்திரம் எழுந்திருக்க

வேண்டியது
அவசியமன்று. அசை
நிலையானது வேற்றுமைப்
படுத்துஞ்சொல் என்பதில்
ஐயப்
பாடு ஒன்றுமில்லை
ஆனபடியால். உரியியல்
முதற் சூத்திரத்
தின் உரையில் 'முதனிலை'
என்ற சொற்
பிரயோகத்தினால்

ஏற்பட்ட ஐயப்பாட்டை நீக்க இத்தலைப்பிலுள்ள இரண்டா .வது சூத்திரம் எழுந்தது. உரிச்சொல்லில் பண்புபற்றிய

செஞ்சொல் வகையும் அவாய் நிலையாகிய வழிமருங்குச்

சொல் வகையும் உள; அவற்றில் செஞ்சொல்லை ஒழித்து

ஒழிந்த மெய் தடுமாறிய அல்லது மருங்கிலுள்ள கூறுனது

இச்சூத்திரத்தில் விசேடிக்கும் சொல் எனப்பட்டது.

தமிழ் இலக்கணத்திற்குரிய வரலாற்று முறைகளில்

வேறுபாடு :—அடியிற்கண்ட பாடல்கள்

வீரசோழியத்தி

விருந்து எடுத்து

எழுதப்படுகின்றன.

## 1:

## வீரசோழியம்—பாயிரம்—2ம் பாடல்.

ஆயுங்குணத்தவ லோகிதன்பக்கல் அகத்தியன்கேட்
டேயும் புவனிக் கியம்பிய தண்டமிழ் ஈங்குரைக்க
நீயும் உளையோ எனிற்கருடன் சென்றநீள் விசும்பின்
ஈயும்பறக்கும் இதற்கென்கொலோ சொல்லும் ஏந்திழையே.

2-ம் 3-ம், வீரசோழியம் சொல்லதிகாரத்தின் ஈற்றில் காணப்படுகின்றன.

வேற்றுமை யெட்டுந் திணையிரண்டும் பாலைந்தும்
ஆற்றுதற்கொத்த வழுவேழும்—ஆறெட்டும்

ஏற்ற முக்கால

மிடமூன்றோ
டிரண்டிடத்தால்
தோற்ற
உரைப்பதாஞ் சொல்.



[இதன் கீழ்
உரை:—இவ்வண்ணம்
எட்டுவகைப் படுத் துச்

சொல்லாராய்ந்தார்

தொல்காப்பியனுர்............வழு

ஏழாவன: திணைபால்

மரபு வினைச்

செப்புக்காலம்-இடனே

டேழாகும் இழுக்கு

என்பதனு லறிக........]

திணைபால் மரபு

வினைச் செப்பிடஞ்சொல்

இணையா

வழூத்தொகை

யோடெச்சம்—அணையாக்

கவினையபார்

வேற்றுமையுங்

காலமயக்குங்கொண்

டவிநயனர்

ஆராய்ந்தார் சொல்.

[உரை:—"எனப்

பதின்மூன்று வாய்ந்தார்

அவிநயனர். இவற்றுள்

தொல்காப்பியனார்

ஆராய்ந்தன நீக்கி

மயக்கமுஞ் சொல்லுஞ்

செப்பும் வினாவும்

எச்சமும் மரபும்

ஏற்றமாச்

சொன்னர். மயக்கமாவது வேற்றுமை மயக்கமும் இடமயக்கமும் காலமயக்கமும் முதலியவாம் எனக் கொள்க. சொல்லாவன, பெயர்ச்சொல்லும் பெயர்த்திரி சொல்லும் தொழிற்சொல்லுந் தொழிற்றிரி சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் எனக்கொள்க. செப்பும் வினவுமாவது........ ............எச்சமாவது பெயரெச்சம் தொழிலெச்சம் என இரண்டாம். மரபாவது ஆண்மைப் பெயர் வரலாறு பெண்மைப் பெயர் வரலாறு தொழிற்பெயர் வரலாறு உவமைப் பெயர் வரலாறு விரவுப்பெயர் வரலாறு எனக் கிடந்தவெனக் கொள்க"]

மேலே எடுத்தாளப்பட்ட பாடல்களிலிருந்தும் உரைப் பாகங்களிலிருந்தும் தமிழிலக்கணத்திற்கு ஆதி யாசிரியன் அகத்தியன் என்பதும் அவ்வாசிரியர்க்குப் பின்னல் தொல்காப்பியர் திணை பால் முதலாக எட்டு விஷயங்களைப்பற்றி ஆராய்ந்தார் என்பதும் அவர்க்குப் பின்னல் அவிநயனர்

என்பார்
தொல்காப்பியனால்
உணர்த்தப்படாத சில
விஷ. யங்களை ஆராய்ந்தார்
என்பதும் நமக்குத்
தெரிகிறது.

தொல்காப்பியனால்
இயற்றப்பட்டதாகக்
கருதப் படும்
தொல்காப்பியத்தின்
இரண்டாவது பாகமாகக்

கருதப் படும்
சொல்லதிகாரத்தில்
அவிநயனர்
ஆராய்ந்ததாகச்
சொல்லப்படும்
விஷயங்களும்
உணர்த்தப்படுகின்றன.
சொல் லதிகாரத்திற்குரிய
உரையாசிரியர்கள்
அவிநயனால் எவ் வெவ்
விஷயங்கள்

உணர்த்தப்பட்டன என்று
நமக்கு எடுத். துக்
காட்டினார்களில்லை.

சொல்லதிகாரத்தில்
ஒரே ஆசிரியரின்
உரையாகக் கரு தப்படும்
உரையைக் கவனித்தாலும்
ஓரிடத்திற் சொன்னதற் கு
மாறாக வேறிடத்தில்
விஷயங்கள்
கூறப்படுகின்றன. இதி

விருந்து எச்சம் முதலிய
விஷயங்களுக்கு
அவிநயனாரே ஆசி ரியர்
என்ற கொள்கையை
உட்கொண்டு
வேறொருவர் எழு தின
உரையும் சேனாவரையர்
முதலியோரின் உரையோடு
கலந்து விட்டது என நாம்
கருத வேண்டியிருக்கிறது.
முதலாவது எச்சம் என்ற

விஷயத்தைப்பற்றி ஆராய்வோம்.

எச்சம்:—மேற்சொன்ன வீர சோழிய வெண்பாக்களி லிருந்து எச்சம் என்பது தொல்காப்பியனரால் உணர்த்தப் படவில்லை என்றும் அவிநயனரால் உணர்த்தப்பட்டது என்றும்

தெரிகிறது.

தொல்காப்பியம்
சொல்லதிகாரம் எச்ச
வியலிலுள்ள
முற்றியன்மொழிக்குரிய
சூத்திர மாகிய
"இறப்பினிகழ்வினெதிர்
வினென்றச் சிறப்புடை
மரபின்" என்ற
சூத்திரத்தின் உரையில்
சேனவரையர்

““உரையாசிரியர்
வினையியலுள் ஓதப்பட்டன
சில வினைச் சொற்கு
முற்றுச் சொல்லென்று
குறியிடுதல் நுதலிற்று

92
தொல்காப்பியம்

௰

இச் சூத்திரம்
என்றாரால் எனின்;
குறியிடுகருத்தாயின்

அவ்வாறென்ப
முற்றியன்மொழியே
என்றது (சூத் திரத்தின்
கடைசிவரியில்)
அவ்வாறும்
முற்றியன்மொழி யெனல்
வேண்டுமாகலான், அது
போலியுரை என்க. முற்றி
யன்மொழியென்ப
என மொழிமாற்றவே குறியீடா
மெனின் குறியீடு ஆட்சிப்

பொருட்டாகலின்

குறியான் அதனை ஆளா

மையான்,

மொழி மாற்றியிடர்ப்படுவ

தென்னையோ என்பது.

அல்லதூஉம்

முற்றின்மொழியெனக்

குறியிட்டாராயின்

இவை பெயரெஞ்சுகிளவி

எனவும்

இவை வினையெஞ்சு கிளவி

யெனவும் குறியிடல்
வேண்டும். அவ்வாறு
குறியிடாமையா
லும் அதுகருத்தன்றாம்.
அதனால் இருவகை
யெச்சம்ஒழித்து
ஒழிந்தசொல்
முற்றிநிற்கும் என்றும்,
அவை இணைத்துப்
பாகுபடும் என்றும்
உணர்த்தல்

இச்சூத்திரத்திற்குக் கருத்தாகக் கொள்க''
என்று கூறுகிறார்.
இங்கே பெய ரெஞ்சு கிளவி
வினையெஞ்சு கிளவி என்ற பாகுபாடும் எச் சம், முற்று
என்பவற்றிடையுள்ள
வித்தியாசமும் தொல் காப்பியனரால்

ஏற்படுத்தப்படவில்லை
என்று கருத்துப்படச்
சேனவரையர் கூறுகிறார்.
ஆதலின் எச்சத்திற்குரிய
இலக்
கணம் அவிநயனால்
விதிக்கப்பட்டது என்ற
வீரசோழியக்
கொள்கைக்கு
இவ்வுரைக்கூற்று
இணங்கியிருக்கிறது.

இச்சூத்திரத்தின் உரையிலேயே சற்று மேலான பாகத்தில் "முற்றிநிற்றல் முற்றுச்சொற்கு இலக்கணமாதல் முற்றியன் மொழி என்பதனுற் பெற்ரும். முற்றிநிற்றலாவது இது என்பது வினையியலுட் கூறினும்......முன்னர்ப் "பிரிநிலை வினையே பெயரே" என்புழிப் பெயரெச்சமும் வினையெச்சமுங் கூறுபவாகலின், சொல்லையும் ஈண்டுக்கூறினுர். அவற்ருேடியைய முற்றுச்

கூறவே முற்றுச்சொல்லும்



பெயரெச்சமும்,
வினையெச்சமுமென
வினைச்சொன் மூவ
கைத்தாதல்
இனிதுணரப்படும்

என்பது" என்று கூறப்படுகிறது. இங்கே பெயரெச்சம் வினையெச்சம் என்ற பாகுபாடு தொல்காப்பியனரால் ஏற்படுத்தப்பட்டது என்று கருத்துப் பட எழுதப்படுகிறது. இக்கருத்தை அநுசரித்தே சொல்

லதிகாரம் வினையியலிலுள்ளதும் 'செய்யும்' என்ற பெயரெச்சத்திற்குரியதுமான 'அவற்றோடு வருவழி" என்ற சூத்திரத்தின் உரையில் சேனாவரையர் "முற்றுச்சொல்லிற்கும் எச்சத்திற்கும் வேற்றுமை யாதெனின்:—பிறிதோர் சொல்லோடியையாது தாமே தொடராதற்கேற்கும் வினைச்சொல் முற்றும்; பிறிதோர் சொற்பற்றியல்லது நிற்றலாற்றா வினைச்சொல் எச்சமாம்; இது தம்முள் வேற்றுமை என்க......... இவ்வேற்றுமை விளங்க ஆசிரியர் முற்றுச்சொல்லென்றும் எச்சமென்றும் அவற்றிற்குப் பெயர் கொடுத்தார்" எனக் கூறுகிறார். இதிலிருந்தும் எச்சம், முற்று என்ற பாகுபாடும் அவற்றின் குறிகளும் தொல்காப்பியனால் ஏற்படுத்தப்பட்டது என நாம் கருதும்படி உரை எழுதப்படுகிறது. இக்

கூற்ருனது அவிநயனர் எச்சம் என்பதைப்பற்றி உணர்த்தி

ஞர் என்னும் கொள்கைக்கு மாருக விருக்கிறது. சொல்லதி காரத்தின் உரைகளிலுள்ள இம்மாறுபாடான கூற்றுக்களே நாம் ஒற்றுமைப்படுத்த வேண்டுமாளுல் அவிநயனருடைய சூத்திரங்களும் சேனுவரையரல்லா வேருெருவர் அவற்றிற் குச் செய்த உரைகளும் தொல்காப்பியனரின் சூத்திரங்க ளுடனும் சேனுவரையரின் உரையுடனும் கலந்துவிட்டன என்றே கருதவேண்டி யிருக்கிறது.

அவிநயனருடைய சூத்திரங்கள் கலந்த இடங்களில் சேனுவரையர் முதலியோர் தம்முடைய வழி முதலாசிரிய ரான தொல்காப்பியரின் கொள்கைகளே மேற்கொண்டு சூத்தி

ரங்களுக்கு உரை
எழுதியிருப்பதாகவும்
தெரிகிறது. அந்த
இடங்களில்
சேனாவரையர்
உரையானது
சூத்திரத்திற்குப்
பொருத்தமில்லாத
தொன்றாக
நமக்குத்தெரிகிறது. அவிநய

ஞர் சூத்திரங்களுக்கு அவ்வாறு வலிந்துகொண்ட பொருட்கிணங்கப் பிற்காலத்தாரால் புதுச்சூத்திரங்கள் ஆக்கப்பட்டிருப்பனவாகவும் தெரிகிறது. இவ்விஷயம் வேற்றுமை மயங்கியலிலுள்ள "வினையே செய்வது" என்ற சூத்திரத்தை நாம் ஆராய்ந்தபொழுது கவனிக்கப்பட்டது.

மேற்சொன்னதிலிருந்து வினையியலிலுள்ள

"அவற்றொடு

வருவழி" என்ற சூத்திரத்தின் உரையில் முற்று, எச்சம், ஆகிய காரண விடுகுறிகளின் சம்பந்தமாகச் சொல்லப்பட்ட கருத்துக்கள் தொல்காப்பியனாருடைய வல்லவென்றும் அவி நயனாருடையவென்றும் நாம் கொள்வதேபொருத்தமாயிருக் கிறது. சொல்லதிகாரம் கிளவி யாக்கம் முதற்சூத்திரத்தின் உரையில் நச்சினார்க்கினியர் கூறுவதும் இக்கருத்தை வலி யுறுத்துகிறது. நச்சினார்க்கினியர் அங்கே கூறுவதாது "சொல்லை எட்டு வகையானும் எட்டிறந்த பல் வகையானும் உணர்த்துப. இரண்டு திணையும் ஐந்து பாலும் எழுவகைவழு வும் எட்டு வேற்றுமையும் ஆறொட்டும் மூன்றிடமும்மூன்று காலமும் வழக்குஞ் செய்யுளுமாகிய இரண்டிடமும் என எட்டு வகையின் உணர்த்துப" இம்மேற்கோளில் எச்சம் என்ற குறி காணப்படாதது கவனிக்கத்தக்கது. ஆதலால் எச்

சம் என்பதன்

இலக்கணம்

தொல்காப்பியனாராற்

கூறப்பட

வில்லை என்ற
வீரசோழிய
வெண்பாக்கூற்று
வலிபெறுகிறது.

இந் நச்சினார்க் கினியரின் கூற்றினாலும் வினையியல் "அவற்றோடு வருவழி" என்ற சூத்திரத்தின் கீழுள்ள சேனாவரையர் உரையில் 'எச்சம், முற்று" என்பன ஆசிரியர் இட்ட குறிகள் என்பதில் ஆசிரியர் என்பது தொல்.

சொல்லதிகார விளக்கம்
95

காப்பியனாரைக்

குறிக்காது என்பதும் அவிநயனாரைக் குறிக்-

கும் என்பதும் போதருகின்றன.

ஒட்டு, தொகை, எச்சம்:—இனி எச்சம் என்பதால் நாம் உணரும் இலக்கணக்கருத்தானது அவிநயனார்க்கு முன் எவ்விடு குறியால் ஆளப்பட்டது என்பது நம்மால் ஆராயப்படற் குரித்து. மேலே வீரசோழியத்திலிருந்து எடுத்தெழுதப்பட்டிருக்கின்ற வெண்பாக்களில் இரண்டாவது வெண்பாவில் 'ஒட்டு' என்ற குறி காணப்படவில்லை. முதல் வெண்பாவில் தொகை, எச்சம் என்ற குறிகள் காணப்படவில்லை "சொல்லின் இரண்டாவது பாகுபாடு" என்ற தலைப்பின் கீழ் ஆறெட்டு என்பதன் உட்கிடைப்பொருள் ஆராயப்பட்டது. அங்கே உரிச் சொல்லின் அடியாய்ப் பிறந்தபெயர்த்தொகை (adjective) வினைத்தொகை (adverb) இடைச்சொல்லின் அடியாய்ப் பிறந்த இருவகைத் தழுவி சொற்புகள், வினைச் சொல்லின் அடியாய்ப் பிறந்த இருவகை எச்சங்கள் ஆகிய ஆறுவகைத் தழுவு சொற்களே ஆறு ஒட்டுக்கள் என நிர்ணயிக்கப்படுகின்றன. இவ்வொட்டுக்களில் உரிச் சொல்லினடியாகப் பிறந்தவை வேற்றுமையியலிலுள்ள

"பெயரிளுகிய தொகையுமாருளவே" என்ற சூத்திரத்தில் தொகைச்சொற்கள் எனக் குறியிட்டாளப்படுகின்றன. வினையிற்பிறந்த எச்சங்கள் தொழினிலே ஒட்டுக்கள் என்ற குறியுடன் வழங்கப்பட்டு வந்தனவாகத் தெரிகிறது.

ஆகவே மேற்படி வீரசோழிய வெண்பாக்களில் முதலாவதில் 'ஒட்டு' எனக் குறிப்பிடப்பட்டது இரண்டாவது வெண்பாவில் 'தொகை' எனவும் 'எச்சம்' எனவும் இரண்டு பிரிவுகளாகக் கூறப்பட்டிருக்கிறது.

ஆகவே அவிநயனூரால் பெயரெச்சம் வினையெச்சங்களுக்கு எச்சம் என்னும் புதுக்குறி படைக்கப்படும் முன் அவை தொழினிலேயொட்டு என்ற குறியால் ஆளப்பட்டு

வந்தன எனத் தெரிகிறது. அறுவகை யொட்டுக்களில் ஈரெச்சம் தவிர எஞ்சியநால்வகைத் தழுவு சொற்களும், 'தொகை' என்ற குறியால் ஆளப்பட்டிருக்கவேண்டும்.

அவிநயனார்க்குமுன் 'எச்சம்' என்ற குறியின் நிலை. இனி ஆதியில்

'எச்சம்' என்ற குறி எவ்வகையான இலக் கணக் கருத்தை யுணர்த்திற்று என ஆராய்வோம்.

சொல்லதிகாரத்தில் கடைசி இயலான 9-வது இயல் 'எச்ச வியல்' என்னும் தலைப்புப் பெயர் பெற்றிருக்கிறது.

வேற்றுமையியல், பெயரியல், வினையியல், இடையியல் உரியியல் என்ற தலைப்புப் பெயர்களில் வேற்றுமை முதலிய குறிகள் இலக்கண வாய்பாடு அல்லது சொற்கூற்றையே குறிக்கின்றன; அதுபோல எச்சவியல் என்ற தலைப்புப் பெயரில் எச்சம் என்பதும் ஒரு வாய்பாட்டின் குறியையே குறித்திருக்கவேண்டும். கிளவியாக்கம் முதல் உரியியல் ஈறாக உள்ள இயல்களிற் கூறப்படாமல் எஞ்சிநின்ற பல சொல்லிலக்கணங்கள் இக் கடைசியியலில்

உணர்த்தப்பட்டமையால் இவ்வியல் எச்சவியல் எனப் பெயர் வாய்ந்தது என்று சேனாவரையர் கூறுகிறார்.

இது பொருத்தமாகத் தெரியவில்லை. இவ்வாறு தாம் சொல்வதற்கு ஆட்சேபனை எதிர்பார்த்து மேலும் சேனாவரையர்
7 கூறுவதாவது, 'பலபொருட் டொகுதிக்கு ஒன்றனாற் பெயர் கொடுக்குங்கால் தலைமையும் பன்மையும் பற்றிக் கொடுப்பினல்லது

பிறிதாறின்மையானும், தலைமையும் பன்மையும்

எச்சத்திற்கின்மையானும் பத்துவகை எச்சம் ("பிரிநிலைவினையே" என்ற சூத்திரத்திற் குறிப்பிட்டவை) ஈண்டு உணர்த்தலின் எச்சவியலாயிற்றென்றல் பொருந்தாமை யுணர்க."

சேனாவரையருடைய இக்கூற்றிலிருந்து எச்சம் என்ற குறியுடைய ஒரு வாய்பாடு (part of speech) அக்காலத்தில் இருந்தது என்றும், அவ்வாய்பாடு செஞ்சொற் பெயர்,



செஞ்சொல்வினை

முதலியவைபோன்று
தலைமை யுடையது
அன்று என்றும்
தெரிகிறது. இக்கூற்றில்
'எச்சம்' என்பதற்
குப் பெயரெச்சம்
வினையெச்சம்
என்பவைகளிற்போலத்
தழுவு சொல்வகையைக்
குறிப்பதாகச்
சேனாவரையர் கருதி
எச்சத்திற்குப் பன்மை

கிடையாது எனக்
கூறுகிருர். ஆனுல்
"பிரிநிலைவினையே" என்ற
சூத்திரத்தில் பிரிநிலைச்
சொல்லான ஓ, ஏ,
முதலியவும் எதிர்மறைச்
சொற்களும் எச்சம் எனக்
கூறப்படுதலின் இவை
பன்மையவாயி
ருக்கின்றன என்பதைச்
சேனவரையர்
கவனிக்கவில்லை.

இடையியலிற்
கிளந்தோதப்பட்ட
பிறிநிலை முதலான
பொருள்கட்குரிய
சொற்கூறுகளைத்
தொகுக்குங்கால்
அவை பன்மையவாகிய
எச்சங்கள் ஆகின்றன.
அக்காலத்
தில் பன்மையவான
அவ்வெச்சங்களெல்லாம்
எச்சவியலில்

உணர்த்தப்பட்டிருக்கவேண்டும். அக்காரணத்தால் இவ் வியல் "எச்சவியல்' எனப்பேரிடப்பட்டிருக்க வேண்டும் எனத்தெரிகிறது. சொல்லதிகாரத்தில், 1 முதல் 8-வது இயல் வரை பெயர், வினை, வேற்றுமைச் சொல், பெயரொழிபில்

இருவகை, வினையொழிபில் இருவகை ஆக 7 வகையான வாய்பாடுகளே உணர்த்தப்பட்டிருக்கவேண்டும்; எஞ்சி

நின்ற அசைநிலை என்னும் குறிக்கீழ் வருவதாகக் கருதப்

படும் "மன், தில், கொல், கொன், உம், ஓ, ஏ, என, என்று, மற்று, மன்ற, அந்தில், அங்கு" முதலிய சொற்களெல்லாம் இவ்வெச்ச வியலில் உணர்த்தப்பட்டிருக்கவேண்டும்; இவ் வசை நிலைகள் யாவும் எஞ்சுபொருட்கிளவி (Extra part of speech) அல்லது எச்சம் எனக் குறியிடப்பட்டிருக்க வேண்டும். இப்போது இருக்கிற நிலைமையிலும் எச்ச வியலில் கண்டீர், கேட்டை முதலிய அசை நிலைகள் உணர்த் தப்படுகின்றன. மற்ற இயல்களிற் கூறப்பட்ட வேற்றுமை முதலிய சொற்கூறுகளின் நிமித்தம் அவ்விடங்களுக்கு எவ்

$6\frac{1}{4}$

வாறு தலைப்புப்
பெயர்கள்
இடப்பட்டிருக்கின்றனவோ
அவ்வாறே அசைநிலையான
எச்சம் என்ற குறியின்
நிமித்த மாக
இக்கடைசியியலும்
'எச்சவியல்' எனப்
பெயரிடப்பட் டிருக்க
வேண்டும்.

பிற்காலத்தில் 'எச்சம்' என்னும் குறிக்கு உரித்தல்லாப் பெயரெச்சம் முதலியவற்றைப் "பிறநிலை வினையே" என்ற சூத்திரத்தில் எஞ்சு பொருட்கிளவி எனக் கூறிவிட்டதால் 'எச்சம்' என்னும் குறி தன் ஆதி உண்மைப் பொருளை இழந்துவிட்டது.

செய்யுளீட்டச் சொல் முதலிய பல்வகைப் பொருள் களும் எச்சவியலிற்

கூறப்படுவதால், எச்சவியல் என்பதற்கு எஞ்சிய இலக்கணம் கூறும் இயல் எனப் பொருள் கொள் ளப்பட்டது. பெயர், வினை, இடை, உரி என்ற நால்வகை

யில் ஏதாவது ஒரு வகையில் எச்சப் பொருளாகிய அசை நிலையைச் சேர்க்கக் கருதி அசைநிலைக்குரிய சூத்திரங்க

ளெல்லாம் எச்சவியலிலிருந்து படுத்தப்பட்டன.

இடையியலுக்கு அப்புறப்

# வழுவமைதிகளின் வகை

செப்பு வினை:—வீர சோழியத்திலிருந்து நாம் மேலே எடுத்தெழுதியிருக்கும் வெண்பாக்களின் பிரகாரம் செப்பு, வினை, மரபு ஆகிய விஷயங்களைப்பற்றிய இலக்கண விதிகள் தொல்காப்பியனால் உணர்த்தப்படவில்லை என்றும் அவிநயனால் அவை உணர்த்தப்பட்டன என்றும் தெரிகிறது. மேற்படி வெண்பாக்களில் இரண்டாவது

வெண்பாவுக்குரிய
உரையின் பிரகாரம்
வேற்றுமை மயங்கியலில்
காணப்படும் வேற்றுமை
மயக்கச் சூத்திரங்களும்,
தொழிற் பெயர் என்ப
தால் சுட்டப்பட்ட
தொழில்
முதனிலையைப்பற்றி.
எழுந்த

# "வினையே செய்வது" என்ற சூத்திரமும், பெயரியலிலுள்ள

விளிவுப் பெயர்க்குரிய சூத்திரங்களும். தொல்காப்பியனால் இயற்றப்பட்டனவல்ல என்று தெரிகிறது. மேற்படி வெண் பாக்களிலிருந்து இவ்விஷயங்கள் தெளிவாய்த் தெரிந்தபோதி லும் முதல் வெண்பாவின் உரையில் நம்பத்தகாத ஒரு மேற் கோட் கூற்றும் காணப்படுகிறது. அதாவது முதல் வெண்பா விற் கூறப்பட்ட வழூவேழு இவை என விளக்குவதில் இவ் வுரையில் யாரோ பொய்யாகக் கட்டிய உரைமேற்கோட்பாடல் ஒன்று காணப்படுகிறது. "திணை பால் மரபு வினைச் செப்புக் கால மிடனேடேழாகுமிழுக்கு" என்பது அம் மேற்கோள். இதிலிருந்து வினை, செப்பு, மரபு ஆகிய விஷயங்களும் தொல் காப்பியனால் சொல்லப்பட்டன எனப் போதருகிறது. இவை அவிநயனால் உணர்த்தப்பட்டன என்று இரண் டாவது வெண்பா கூறுகிறது. ஆதலின் இம்மேற்கோள்

யாரோ இடையில் ஒருவர் செருகிச் சேர்த்தது எனத் தெரிகிறது. வழு ஏழு என்பதற்கு செப்பு, வினா, மரபு ஆகிய மூன்றையும் சேர்க்காமலே நாம் வகை சொல்லலாம். திணை இரண்டு பால் ஐந்து எனவாவது, பாலைந்து, காலம், இடம் எனவாவது நாம் வழு ஏழுக்கு வகை சொல்ல லாம். அல்லது செப்பு இரண்டுவகை வினா ஐந்துவகை என் பனவற்றில் ஏற்படும் எழுவகை வழுக்களையாவது செப்பு நான்குவகை வினா மூவகை என்பனவற்றில் ஏற்படும் எழு வகை வழுக்களையாவது மனதில் வைத்துக்கொண்டு செப்பு வினாக்களின் சம்பந்தமில்லாத வழுக்களும் ஏழு எனத் தவ றுதலாகச் சொல்லப்பட்டிருக்கலாம். எட்டு வகையாய்த் தொல்காப்பியனார் சொல்லை ஆராய்ந்தார் என்று கூறி அவற்றை நச்சினார்க்கினியர் வகை சொல்வதில் செப்பு, வினா, மரபு என்னும் மூன்றையும் அவர் எடுத்தோதாததால் இவை மூன்றும் தொல்காப்பியனாரால் சொல்லப்படவில்லை

என்றே நாம்
கொள்ளவேண்டும்.
இதற்கு மாருகக் கிளவி

யாக்கம் 11வது
சூத்திரத்தின் உரையில்
சேனவரையர் வழூ
வகைகளைக் குறிப்பிட்டெண்ணுவதில்
செப்புவழூ, விஞவழூ,
மரபு வழூ என மூவகை
வழூக்களைச்
சேர்ப்பது உண்மைக்கு

மாருகவிருக்கிறது.
அவிநயனுரால் பின்னுல்
இயற்றப்பட்டுத்
தொல்காப்பியம்
சொல்லதிகாரத்தில் உடன்
அமைக்கப்பட்
டிருக்கிற செய்பு,
விணைக்களுக்குரிய
சூத்திரங்களும் தொல்
காப்பியனுருடையனவே
என நாம் கருதும்படி

உரை எழு
தப்பட்டிருப்பது
முறையல்லாத வழி என
நாம் கருத
வேண்டும்.

'மேற்கூறியதிலிருந்து
சொல்லதிகாரத்தில்
உணர்த்தப்
படும்

வழுவிலக்கணமானது

வெவ்வேறு

ஆசிரியர்களால்

இயற்றப்பட்ட சூத்திரங்களால்

நாம் தெரிகிறோம்.

முடிவிடம்.

| | |
|---|---|
| 14 | 12 |
| 20 | 24 |
| 22 | கீழ்க்குறிப்பு |
| 23 | 11 |
| 30 | 26 |
| 31 | 2 |
| ,, | 4 |
| 35 | கடைசி |
| 36 | 10 |

| | |
|---|---|
| 46 | 20 |
| 47 | 9 |
| ,, | 23 |
| 48 | 3 |
| 52 | 18 |
| 54 | கீழ்க்குறிப்பு, 2 |
| ,, | ,, 3 |
| 61 | 14 |
| 63 | 21 |

பிழை.

திருத்தம்.

இளவியாக்கழும்

இளவியாக்கமும்

யயம் சயம்

தத்தது

தக்கது

சேனாவரையாரால்

சேனாவரையரால்

சேனுவனுரயர்

சேனுவரையர்

சுன்பன

என்பன

உதவியன்றி

உதவியின்றி

இருயெரட்டு

இருபெயரொட்டு.

வாய்ப்பாடு

வாய்பாடு

வாய்ப்பாடு

வாய்பாடு

பாக்ஷை

பாஷை

வாய்ப்பாடு

வாய்பாடு

என்மண்ர்

என்மனார்

என்ற என்ற

சொல்லிற்யோல

சொல்லிற்போல

| அகிய | ஆகிய |
| --- | --- |

அவாநிலையாய்

அவாய்நிலையாய்

வாய்ப்பாட்டு

வாய்பாட்டு

இளிவியும்

கிளவியும்

தொழில் முதனிலை

தொழின் முதனிலை

அவாநிலையாய்

